# சர்வஞானோத்தர ஆகம ஞானபாத வசனம்





வெளியீடு:
சிவதொண்டன் சபை
434, காங்கேசன்துறை வீதி,
யாழ்ப்பாணம்.
1998

உ
சிவமயம்

# சர்வஞானோத்தர ஆகம

# ஞானபாத வசனம்






வெளியீடு:

சிவதொண்டன் சபை
434, காங்கேசன்துறை வீதி,
யாழ்ப்பாணம்.
1998

வெளியீடு :- *சிவதொண்டன் சபை*
434, காங்கேசன்துறை வீதி,
யாழ்ப்பாணம்.

விலை ரூபா: **50/=**

அச்சுப்பதிப்பு
அஷ்டலக்ஷ்மி பதிப்பகம்
320, செட்டியார் தெரு,
கொழும்பு-11.
தொலைபேசி:-334004

உ

## பதிப்புரை

மாதவச் சிவயோகசுவாமிகள் திருவுளப்பாங்கின் வண்ணம் நிறுவப்பெற்ற சிவதொண்டன் சபை ஏறத்தாழ அரை நூற்றாண்டு காலமாகப் பறை சாற்றாது அடக்கமாக உலகளாவிய சிவதொண்டு ஆற்றிவருவதை அனைவரும் அறிவர். அத்தோடு ஞானத்தொண்டாகத் தலை சிறந்த ஞான நூல்களையும் பதிப்பித்து சைவத்தொண்டர், சமயவாழ்வில் கடைத்தேற வழிசெய்து வருவதும் கண்கூடு.

சுத்தாத்துவித சைவ சித்தாந்த சமய இக்காலநிலையைச் சிந்தித்துச் சமகாலத் தேவைக்கேற்றபடி, சைவ சமய முதல் நூல்களின் சிரோமணியாக விளங்கும் சருவஞானோத்தர ஆகம ஞானபாதம் (தமிழ் மூலமும் உரையும்) என்னும் இந்நூலை குருவருள் கூட்டப்பதிப்பித்துள்ளோம். சிவதொண்டுச் செல்வர்க்குச் சிவஞானச்செல்வமும் ஆக்கும் அருளாற்றல் உள்ளது இந்நூல். ஆணவ இருட்டறை மூலையில் இருக்கும் ஆன்மாக்களை ஞான முற்றத்தில் விடவும் வல்லது, வீடு காதலிப்போர்க்குச் சொரூப முத்தி நெறியில் அழைத்துச்செல்லும் வழித்துணையுமாகும்.

சைவ சித்தாந்தத்தைப் பொதுவகையாகக் கூறும் காமிகம் முதல் வாதுளம் ஈறாகிய இருபத்தெட்டு ஆகமங்களையும் ஸ்ரீகண்ட பரமேசுவரன் இருடிகளுக்கும்,முனிவர்களுக்கும் உபதேசித் தருளினார். சருவ ஆகமங்களின் சாரத்தைச் சிறப்பாக எடுத்துக்கூறும் சருவஞானோத்தர ஆகமத்தை அப்பெருமான் ஸ்கந்த குருவான சுப்பிரமணியக் கடவுளுக்கு உபதேசித்தருளினார். கடவுள் கடவுளுக்கு உபதேசித்த பெருமையுடையது இவ்வாகமம்.

இவ்வாகமத்தை உபதேசிக்கும் கால், "இந்த ஆகமத்திற் கூறப்படும் முத்தி பரம இரகசியம், இந்த இரகசியத்தை நாம் யாருக்கும் சொன்னதில்லை." எனத் தொடங்கி உபதேசமுடிவில் "இதற்குமேல் அறியற்பாலன ஒன்றும் இல்லை" என்று கூறி மூன்று முறை சத்தியஞ்செய்து, இவ்வாகமத்திற் கூறப்பட்ட முத்தியே மேலான முத்தி என வற்புறுத்தியுள்ளார். மாதவச்சிவஞான முனிவரும் சிவஞானமாபாடியத்தில் இவ்வாகமத்தைப் பலவாறு பாராட்டி, சித்தாந்த சம்பந்தமான எந்த நூலிலும் பார்க்க இந்தநூல் சிறந்தது என்பதையும், இந்நூற் பொருளுக்கு ஏற்பவே ஏனைய நூல்களுக்குப் பொருள் கொள்ள வேண்டும் என்பதையும் நன்கு தெளிவுறக் கூறியுள்ளார்.

வேதம் பசு; சிவாகமங்கள் பால்; அவ்வாகமங்களின் ஞான பாதம் நெய்; இந்தச் சருவஞானோத்தர ஆகமம் அந்நெய்யின் சுவையாகும். சருவஞானோத்தர ஆகம ஞானபாதத்தை நாள் தோறும் பொருளுணர்ந்து படித்து வருவோர் ஞானவரம்பாகிய மோனநிலையுங் கடந்த நிர்விகற்பராய் முற்றறிவுடைய அபரமுத்தராய் சிவத்தன்மை அடைவர். சிவமே தானான அவர் எல்லா அண்டமும், மூவரும் தேவரும், தம்முள்ளே முளைப்பதும் காண்பர்.

சிவனடியார் எல்லாரிடத்திலும் இருக்க வேண்டும் என்னும் பெருவிருப்பால் இந்நூலைப் பதிப்பித்தோம். இந்நூல் பெறுதற்கரிய சொரூபமுத்தியாகிய பெரும் பயனளிக்கும் பாக்கியமாகும். ஒன்றுமே செய்ய முடியாத பல தடைகள் மலிந்த இக்காலச் சூழ்நிலையில் இந்த அரியஞான நூலைப் பதிப்பிக்கத் துணையாயிருந்த திருவருளுக்கும், குருவருளுக்கும், அழகாகவும், திருத்தமாகவும் அச்சிட்டுத்தந்த அஷ்டலக்ஷ்மி உரிமை யாளருக்கும், ஊழியருக்கும் சிவதொண்டன் சபையாரின் கனிந்த நன்றி உரித்தாகுக.

'சிவதொண்டன்'

சிவதொண்டன் நிலையம்
செங்கலடி.



# முன்னுரை

நூற்சிறப்பு :-

சருவ ஞானோத்தரம் சைவசித்தாந்த நூல்களிலே தலைசிறந்தது; மாதவச் சிவஞான யோகிகளாற் பலவாறு புகழ்ந்து பாராட்டப்பெற்றது. அன்றியும் அவராலே இயற்றப்பெற்ற திராவிடமாபாடியத்திலே எடுத்துத் தொகுத்து விளக்கப்பெற்ற பொருட்சிறப்பையுடையது. சைவசித்தாந்தப் பொருளைச் சிறப்பு வகையாக எடுத்தோதுவது இச் சருவஞானோத்தர ஆகமத்தின் ஞானபாதமேயாகும். ஏனைய ஆகமங்கள் பிறமதக் கொள்கைகளை மறுத்துரைப்பதே நோக்கமாக கொண்டெழுந்தன. ஆதலினால் இவ் வாகமங்கள் சைவசித்தாந்தப் பொருளைப் பொதுவகையாகவே எடுத்தோதுகின்றன.

இச் சருவ ஞானோத்தர ஆகமத்தின் பொருட் சிறப்பை நோக்கியே சீகண்டநாயனார் முருகக்கடவுளுக்கு இதனை உபதேசித்தருளினார். இத்துணைச் சிறப்பின்மையைத் திருவுளத்துக்கொண்டே ஏனைய ஆகமங்களை அவர் இருடிகளுக்கு உபதேசித்தருளினார். இந்நூல் பிறமதக் கண்டனஞ் செய்யாது சைவசித்தாந்தப் பொருளை மாத்திரம் கூறுகிறது. இதனாலேயே இந் நூலைக் கேட்போர் சைவசித்தாந்தப் பொருளை எளிதில் விளங்கிக்கொள்கின்றனர். ஏனைய ஆகமங்கள் கூறும் சைவசித்தாந்தப் பொருள் முன்னொடு பின் முரணின்றி உய்த்துணரவல்லார்க்கே விளங்கும். ஏனையோர்க்கு இனிது விளங்காது.

காமிகம் முதலிய இருபத்தெட்டு ஆகமங்களும் இறைவனுடைய தடத்தநிலையை மாத்திரம் எடுத்து ஓதுகின்றன. ஆதலின் அவை கூறும் முத்தியும் "பதிதானாதல்" எனப்படும் தடத்தநிலை பற்றியதேயாம். இந்தச் சருவஞானோத்தர ஆகமம் முதல்வனுடைய சொரூபநிலையைச் சிவம் எனவும் தடத்தநிலையைப் பதி எனவும் வைத்துப் பொருள்கள் நான்கு

எனக்கூறுகின்றது. ஆகையால் இவ்வாகமத்திற் கூறப்படும் முத்தி "சிவம்" தானாதல் எனப்படும் சொருபநிலைபற்றியதாகும். இவ்வாகம ஞானபாதத்தை உபதேசிக்கத் தொடங்கும் பொழுதே "இவ்வாகமத்திற்கூறும் முத்தி பரம இரகசியம்; இந்த இரகசியத்தை யாம் இதுவரை ஒருவருக்கும் சொன்னதில்லை." என்று கூறியருளியமையே இவ்வாகமத்திற் கூறப்பட்ட முத்தி ஏனைய ஆகமங்களிற் கூறப்படவில்லை என்பதைத் தெளிவாக்குகின்றது. இதுவுமில்லாமல் உபதேச முடிவிலும் "இதற்குமேல் அறியற்பாலன ஒரு நூலினுமில்லை; முக்காலுஞ் சத்தியம்" என்று கூறி இவ்வாகமத்திற் கூறப்பட்ட முத்தியே மேலான முத்தி என்பதை வற்புறுத்தியுள்ளார்.

சைவசித்தாந்தப் பொருளை இத்துணைச் சிறப்பு வகையாற் கூறும் சருவஞானோத்தர ஆகமத்திற்கேற்பவே ஏனைய சிவாகமங்களின் பொருள் தெளிந்து கொள்ளப்படும். இவ்வாறன்றி ஏனைய சிவாகமங்களுக்கேற்பச் சருவஞானோத்தரத்திற்குப் பொருள் கொள்ளுதல் தவறாகும்.

பெயர்க் காரணம்.

சீகண்ட உருத்திரக் கடவுள் சைவசித்தாந்தப் பொருளைச் சிறப்புவகையாற் கூறிய காரணத்தாலே தான் இவ்வாகமத்திற்குச் சருவஞானோத்தரம் என்னும் பெயரை இட்டருளினார். ஞானம் என்னும் சொல்லுக்குப் பொதுவாக அறிவு என்னும் பொருள் கொள்ளப்படினும் சிறப்பாகச் சிவனைப் பற்றி அறியும் அறிவையே அது குறிக்கும். குறிக்கவே சிவனைப்பற்றிய தொன்றுதொட்டு வரும் அறிவு நூல்களான ஆகமங்களும் ஞானம் எனப்படும். படவே சருவஞானம் என்பது சருவ ஆகமம் எனப் பொருள்தரும். உத்தரம், சித்தாந்தம் என்பன ஒரு பொருள் தருவன. எனவே சருவஞான உத்தரம் என்பது சருவஆகம சித்தாந்தம் எனும் பொருள் தரும் காரணப்பெயராம். வாயு சங்கிதையிலும் இந்நூலின் பெயர் சருவஆகம உத்தரம் எனவே எடுத்தாளப்பட்டுள்ளது.



ஞானபாதம்.

உயிர்ப்பொருளைச் சடப்பொருள்களோடு கூட்டுவிக்கும் இறைவன், அவற்றோடு உயிர் கூடிச் செய்வன தவிர்வன அறிந்து முத்தியின்பம் பெறும் பொருட்டு வேத சிவாகமங்களை அருளிச் செய்தார். ஒவ்வோர் ஆகமமும் தனித்தனி சரியை முதல் நாற்பாதங்களையும் கொண்டுள்ளது. ஞானபாதம் "உபதேசகலை" எனவும்படும். காமிகம் முதலிய ஆகமங்களின் ஞானபாதம் முப்பொருளுண்மை, அவற்றின் இலக்கணம், பசு, பாசம் நீங்கிச் சிவத்தையடைதற்கான சாதனம், சாதித்துப் பெறும் பயன் என்பவற்றைப் பொதுவகையாகக் கூறும். இவற்றைச் சிறப்பு வகையாகக் கூறுவதே சருவஞானோத்தர ஆகமத்தின் ஞானபாதமாகும்.

ஞானபாதப் பொருள

சருவஞானோத்தர ஆகமத்தின் ஞானபாதம் ஒன்பது பிரகரணங்களையுடையது. முதன் மூன்று பிரகரணங்களிலும் முத்தி நிலை பற்றிய செய்தி கூறப்படுகின்றது. அவற்றுள் முதலாவது பொருள் நிர்ணயப் பிரகரணம் ஆகும். இதில் பசு, பாசம், அதிகாரஞ் செய்து நிற்கும் பதி, அதிகாரத்தின் ஒழிந்து தன்னியல்பில் நிற்கும் சிவம் என்னும் நான்கு பொருளுண்மை, அவற்றின் இலக்கணம் என்பன கூறப்படுகின்றன. இரண்டாவது சுவான்ம சாட்சாத்காரப் பிரகரணம் ஆகும். இதில் சீவான்மாவிடத்துப் பரமான்மா பிரிப்பின்றி விளங்கித்தோன்றும் முறையினையுணர்ந்து சீவான்மாவே பரமான்மா என அத்துவித பாவனை செய்ய சீவான்மாவின் சொருபநிலை விளங்கித் தோன்றுதல் கூறப்படுகின்றது. மூன்றாவது ஆன்மசமாதிப் பிரகரணமாகும். இதில் ஆன்மாவிற்குச் சிவனொடு பிரிப்பின்றி நிற்கும் தன் உண்மைநிலை விளங்கியதும், அவ்வுண்மையிலே நிலைபெற்றுநிற்கும் சமாதியினால் சிவனுக்குரிய எண்குணங்களும் தன்னிடத்திலே விளங்கித் தோன்றுதல் கூறப்பெறுகின்றது. ஏனைய ஆறு பிரகரணங்களிலும் ஆன்மா சார்ந்ததன் வண்ணமாய் நிற்கும் தன்மையுடையன் என்பது பற்றி அதுவதுவாய் நிற்குமாற்றை திரும்பவும் விளக்குமாறு கூறி வலியுறுத்தும்பொருட்டுப் பூதான்மா, அந்தரான்மா, தத்துவான்மா, சீவான்மா, மந்திரான்மா, பரமான்மா என அறுவகையாக்கி அவ்வவற்றிற் கூடியவழி அவ்வப் பெயர் பெற்று அதுவதுவாய் நிற்பன் என உணர்த்தப்படுகின்றது.

பூதான்மபிரகரணத்தில் ஆன்மா, பூதபரிணாமமாகிய தூலதேகத்தோடு கூடி நிற்கும் பொழுது பூதான்மா எனப் பெயர் பெறுமாறு கூறப்பெறுகிறது. அந்தரான்மப் பிரகரணத்தில் அகத்தின் கண்ணேயுள்ள சூக்குமை முதலிய வாக்குகளுடன் கூடிநிற்கும் பொழுது அந்தரான்மா எனப் பெயர்பெறுமாறு காட்டப்படுகின்றது. தத்துவான்மப் பிரகரணத்தில் சூக்குமப்பூதம் முதலிய தத்துவங்களுடன் கூடிநிற்கும் பொழுது தத்துவான்மா எனப் பெயர்பெறுமாறு விளக்கப்படுகின்றது. சீவான்மப் பிரகரணத்தில் புருடதத்துவமாய் நின்று பிரகிருதி குணங்களைப்பற்றிச் சுகதுக்க போகங்களை அனுபவிக்கும் பொழுது சீவான்மா எனப் பெயர் பெறுமாறு உரைக்கப்படுகின்றது. மந்திரான்மப் பிரகரணத்தில் மந்திரங்களோடு கூடி மந்திரசொரூபமாய் நின்று மந்திரங்களைக் கணிக்கும் பொழுது ஆன்மா படிகம் போல் அம்மந்திரமயமேயாய் மந்திரான்மா எனப்பெயர் பெறுமாறு புலப்படுகின்றது. பரமான்மப் பிரகரணத்தில் மேலே சொல்லப்பட்ட ஐவகைப்பெயரின் நீங்கியவழி ஆன்மா அத்துவித பாவனையால் பரமான்வாவோடு கூடிப் பரமான்மா என நிற்குமாறு சொல்லப்படுகின்றது.

ஆன்மா பரமான்வாவோடு கூடிநிற்றல் சித்து என்னும் சாதிப்பொதுமை பற்றிய என்றுமுள்ள இயற்கைநிலை. ஆன்மா தன்னின் வேறாகிய தேகம் முதலிய ஐந்தோடும் கூடிநிற்றல் உபாதிபற்றிய செயற்கைநிலை. தேகம் முதலிய செயற்கை நீங்கிய போதே இயற்கைநிலை விளங்கித் தோன்றும். இதுவே முடிந்த நிலை.

சீகண்ட உருத்திர நாயனார் முருகக்கடவுளுக்கு சருவஞானோத்தர ஆகமத்தின் ஞானபாதப் பொருளை "முடிந்தது முடித்தல்" என்னும் உத்தி பற்றி "சிவோகம் பாவனை செய்வோன் ஞானக் கண்ணாற் சிவனை ஆன்மாவிற் கண்டு முற்றுணர்வு உடையவனாய் அவ்வப் பொருளியல்பெல்லாம் அறிந்து மலவாசனை நீங்கிக் கேவலமாய் நின்று முடிவு காணமுடியாத பேரின்பத்தைப் பெறுவான்" என்று விளக்கி ஈற்றில் "சர்வஞானோத்தரம் சமாப்தி" எனக் கூறி உபதேசத்தைப் பூர்த்தி செய்துள்ளார்.



# சிறப்புப்பாயிரம்

சர்வஞா னோத்தரத்தைச் சந்ததமும் பார்த்தால்
வருமோ பிறவி மறித்திங்கு - அரிதான
பேரின்ப வெள்ளம் பெருகுமே பற்றொழித்த
தீரருக்கீ தாமென்றே செப்பு

சருவ ஞானோத்தர ஆகமம் சிவபெருமானால் அருளிச் செய்யப்பட்டதாகும். முருகப்பெருமான் மீது அவர் கொண்ட அளவிறந்த அருள் வழியே இந்நூல் பிறந்தது. சருவஞானோத்தரம் என்ற பெயர் சிவபெருமானாலேயே இடப்பெற்றதாகும். செந்தமிழ்மொழி பரந்து வழங்கும் தேசங்களே இத்தமிழ்நூல் வழங்குதற்கான எல்லையுமாகும்.

இந்நூல் நுதலிய பொருளும் சகல ஆகம சித்தாந்தமேயாகும். பசு, பாசம், பதி, சிவம் நான்கு உண்மைப் பொருள்கள் இந்நூலிற் கூறப்பெறுகின்றன. அவனருளே கண்ணாகக் கொண்டு தான் இப் பொருள்களைக் காண வேண்டும். பசுஞான, பாசஞானங்களால் இவற்றைப் பார்க்க முடியாது.

சரியை, கிரியை, யோக நூல்களையும் ஞானத்தின் பொருளை உணர்த்தும் நூல்களையும் பாடம் கேட்டுச் சிந்தித்துத் தெளிந்த பின்னரே இந்நூல் உபதேசக்கிரமத்தில் கேட்கத்தக்கது.

யான் எனதென்னும் தேகபற்றை அறநீத்த அதிதீவிரபக்தர்தான் இந்நூலைத் தேசிகமரபிற்கேட்டுச் சிந்தித்துத் தெளிதற்குரியர். பக்குவமற்றோர்க்கு இந்நூலை உபதேசித்தலாகாது.

இவ்வாறு உபதேசக்கிரமத்திற் பொருள்களின் உண்மையை உணர்ந்து ஒழுகுவோர் இம்மண்ணுலகில் மீளப்பிறவார். எவராலும் எளிதில் அடையமுடியாத பேரின்ப முத்தியைப் பெறுவர். பாசநீக்கமும் சிவப்பேறும் ஆகிய இருவகைப்பயனையும் பெறுவர்.

# ஓம் சிவ
# சருவஞானோத்தர ஆகமம்
# ஞானபாத வசனம்.

காப்பு

முத்திவி நாயகனே முன்னம் முருகன்சேர்
சித்திவி நாயகனே சேர்த்தருள்க - சுத்தபர
அத்துவித மோதகமே யாஞ்சருவ ஞான
உத்தர மோதகமே உண்டு.

போதரான நாலக யாழ்ப்பாணம்

## பொருள் நிருணயப் பிரகரணம்.

1. பசு, பாசம், பதி, சிவம் என்னும் நான்கு பொருள்கள்.

பதி, பசு, பாசம் என்னும் மூன்று பொருள்களும் அநாதியானவை. சைவசித்தாந்தம் இம்மூன்று பொருள்களும் என்றுமுள்ளவை என்னும் கொள்கையுடையது. இறைவனுக்கு தடத்தநிலை என்றும் சொரூபநிலை என்றும் இரண்டு நிலைகள் உண்டு. இந்த இரண்டு நிலைகளையுமே வேறுவேறாக வைத்து சருவஞானோத்தர ஆகமம் முப்பொருள்களையும் சிவம், பதி, பசு, பாசம் என நான்கு பொருள்களாக விரித்துக் கூறுகிறது.

பதி வியாபகத்தன்மையும், பொருட்டன்மையும் ஒருங்கேயுடையது. அது தனது வியாபகத் தன்மையாற் பசுவுடனும், பாசங்களுடனும் கலந்து அதுவதுவாய் நிற்கின்றது. அவ்வாறு அதுவதுவாய் நிற்கின்ற பொழுதே பொருட்டன்மையால் அவற்றோடு தோயாது, அவற்றைக்கடந்து அவற்றின் வேறாயும் நிற்கின்றது.

கலந்து அதுவதுவாய் நிற்கும் நிலை இரு வகைப்படும். அவற்றுள் ஒன்று கலந்துநிற்றற்குரிய ஆற்றலுடைய நிலை;

மற்றையது கலந்து நின்று ஐந்தொழில் செய்யும் செயலுடைய நிலை. ஆற்றலோடு கூடிக் கலந்து நிற்கும் நிலையிலேயே சக்தி என்னும் பெயரைப் பெறுகின்றது. கலந்து நின்று ஐந்தொழில் செய்யும் நிலையிற் பதி என்னும் பெயர் பெறுகின்றது.

கலக்கும் ஆற்றலுடைய சக்தியும், ஐந்தொழிலுடைய பதியும் தடத்தநிலை எனப்படும். (தடத்தம்-பிறபொருளோடு கலந்து நிற்றல்) பொருட்டன்மையால் வேறாய் நிற்கும் நிலை சொருபம் எனப்படும். (சொரூபம்-தனித்து நிற்றல்;) தடத்தத்தைப் பொதுவெனவும் சொருபத்தைச் சிறப்பு எனவுங் கொள்வர்.

சித்தாந்த சாத்திரங்களினுள்ளே பதியும், சிவமும் ஒருபொருள்போலக் கொள்வதே பெருவழக்காகும். இந்த நூலில் தடத்த நிலை பற்றியே பதியெனவும், சொருப நிலை பற்றியே சிவம் எனவும் இரு சொற்களாகக் கொள்ளப்பட்டன. இறைவனின் இருநிலைகளும் தனித்து அறிய நிற்றல் பற்றியே இருவேறு பொருள்களாக வைத்து எண்ணப்படுகின்றன. இக்கொள்கையை உணர்த்துவதற்கே இச்சருவ ஞானோத்தர ஆகமம் எழுந்தது.

இறைவனுக்குரிய தடத்தநிலை, சொருப நிலை என்னும் இருநிலைகளும் மேலே விளக்கப்பட்டுள்ளன. அவற்றைப் போலவே உயிருக்கும் தடத்த சொருபநிலைகள் உண்டு. பாசத்தோடு கூடி அதுவதுவாய் நிற்றல் உயிரின் தடத்த நிலை. தடத்தநிலையில் உயிர் பாசத்துக்குக் கட்டுப்பட்டு நிற்கும் காரணம் பற்றிப் பசு என்னும் பெயரைப் பெறுகின்றது. பாசத்தினின்றும் நீங்கித் தன்னோடு என்றும் பிரிப்பின்றி உடன் நிற்கும் சிவத்தை உணர்ந்து அதுவாய் நிற்றல் உயிரின் சொருப நிலை. சொருபநிலையில் உயிர் ஆன்மா என்னும் பெயரைப் பெறுகின்றது. ஆன்மா என்னும் பெயரும் உயிர் வியாபகமாய் நிற்றலால் ஏற்பட்ட காரணப்பெயரேயாகும். எனவே உயிர் தடத்த நிலையிற் பசு எனவும் சொருபநிலையில் ஆன்மா எனவும் எண்ணப்படும். எண்ணப்படினும் இறைவனின் இருநிலைகளையும் போலத் தனித்து அறிய நில்லா. யாதேனும் ஒன்றைச் சார்ந்து அதுவதுவாய்



நிற்கும். ஆதலால் உயிரின் இவ்விரு நிலைகளும் வேறுவேறு பொருள்களாக வைத்து எண்ணப்படுவதில்லை.

ஆணவம், கன்மம், மாயை எனப் பாசம் மூன்று வகைப்படும். மூவகைப் பாசங்களுக்கும் தடத்த நிலை, சொருப நிலை என்னும் இரு நிலைகளும் உண்டு. மோகம் முதலிய குணங்களே ஆணவத்தின் தடத்த நிலை. ஆன்மாவுக்கு அறியாமையைச் செய்தல் அதன் சொருப நிலை. இவ்விரு நிலைகளிலுஃ ஆணவம் பகவைப்பற்றியே நிற்கும். தனித்து நில்லா. ஆதலால் ஆணவத்தின் தடத்த சொருப நிலைகளை வேறுவேறாக வைத்து எண்ணப்படுவதில்லை.

நல்வினை தீவினை, புண்ணியபாவம், சுகதுக்கங்கள் என்பன கன்மத்தின் தடத்தநிலை. விருப்பு வெறுப்பு அக்கன்மத்தின் சொருபநிலை. தத்துவங்கள் முப்பத்தாறும், தாத்துவிகங்கள் அறுபதும் மாயையின் தடத்தநிலை. மயக்கத்தைச் செய்தல் அதன் சொருப நிலை. மாயையும் கன்மமும் உடைமைப் பொருளாக இறைவனிடத்து நிற்பன, தனித்து நில்லாதன. ஆதலால் அவற்றின் இருநிலைகளும் வேறுவேறு பொருள்களாக வைத்து எண்ணப்படுவதில்லை.

பசு, பாசம், பதி, சிவம் என்னும் நான்கு பொருள்களின் சொருபம் அவற்றின் இலக்கணம், பசு அநாதியே பாசத்திற்கு கட்டுப்பட்டிருத்தற்குக்காரணம் என்பன பற்றி முருகக்கடவுள் சீகண்ட பரமேஸ்வரரிடம் பின்வருமாறு வினாவினார்:-

முருகக் கடவுள்:- பசுவின் சொருபமும் அதன் இலக்கணமும் பாசத்தின் சொருபமும் அதன் இலக்கணமும் பசுத்துவத்தைப் பொருந்தும் படியாக உயிர்களுக்கு அநாதியே கூடியுள்ள பாசத்தின் சம்பந்தமும் கேட்க வேண்டும் என்று விரும்பினேன். இன்னும் நூல்களில் சொல்லப்படுகின்ற அதிகாரத்தோடு கூடி ஐந்தொழில் செய்யும் அப்பதியின் சொருபம் யாது? பசுவுக்குப் பாசத்தை நீக்கும் பொருட்டு ஐந்தொழில் செய்யும் அதிகாரம் நீங்கிய சிவனுடைய சொருபம் யாது?

சீகண்ட பரமேசுவரர்:- பசுவைப் பற்றி முன்னர்ச் சொல்ல வேண்டுமோ? பாசத்தைப் பற்றி முன்னர்ச் சொல்ல வேண்டுமோ?

முருகக் கடவுள்:- பசுவாவது யாது? அது எக் காரணத்தால் அநாதியே பாசத்தின் கட்டுப்பட்டது? அந்தப் பாசம் தான் யாது? சீகண்டபரமேசுவரர் பொருள்களின் சொரூபமும் இலக்கணமும் பிறவும் பற்றி மேல் வருமாறு உபதேசித்தருள்கிறார்.

**2. பசுவின் சொரூபமும் தன்மையும்.**

பசுவின் சொரூபமாவது வியாபகமும், அறிவுருபமுமாம். அது வியாபகமாயுள்ள பூத ஆகாயம் போலச் சடமானதன்று அறிவுருபமாயுள்ளது. பசுவின் தன்மைகள் பல. இறைவன் போலத் தனித்து நின்று அறியாது. யாதேனும் ஒன்றன் துணைகொண்டே அறியும். அவ்வாறு அறிதலினாலே பசு சுதந்திரமில்லாத அறிவுடையதாகும்; சிற்றறிவினதாகும். என்றும் அடிமைத் தன்மையுடையது. அது அநாதியே மலத்தால் கட்டுப்பட்டுள்ளது. மலத்தின் மயக்கத்தால் அறிவு, இச்சை, செயல்களின் தொழிற்பாடு இல்லாதது. அன்றியும் முத்திநிலையில் விட்டொழியும் பாசப்பற்றுடையது.

அறிவு சொரூபமான ஆன்மாவிடத்து சிவம் அநாதியே பிரிப்பின்றி கலந்து நிற்கின்றது. சிவம், ஆன்மா ஆகிய இவ்விரண்டு சுத்தப் பொருள்களின் கலப்பு அநாதி இயற்கை. ஆன்மாவின் அறிவோடு ஆணவம் பிரிப்பின்றிக் கலந்து நிற்கிறது. சித்தும் சடமுமான இவ்விரு பொருள்களின் கலப்பு அநாதி செயற்கையாகும். ஆன்மாவுடன் கலந்து நிற்கும் சிவம் ஆன்ம அறிவுடன் கலந்து நிற்கும் ஆணவத்தால் கட்டுப்படுவதில்லை. ஆன்ம அறிவில் சிவத்தின் தன்மை விளங்கவொட்டாது ஆணவ மலமே தடைசெய்கிறது. செம்பினிடத்துக் களிம்புபோல ஆன்ம அறிவினிடத்து ஆணவமலம் அநாதியே கலந்துள்ளது. அது இடையில் வந்ததன்று. இடையில் வந்ததாயின் வந்தமைக்குக் காரணம் வேண்டும். காரணமின்றி வந்ததாயின் (நீக்கப்படினும்) முத்திநிலையிலும் காரணமின்றி மீண்டும் வந்து மூடும். ஆனால்



முத்தான்மாவை மலம் மூடுவதில்லை. ஆதலால் ஆன்ம அறிவு மலத்தினால் மூடப்படுதல் அநாதி என்பது தெளிவாகின்றது.

செம்பானது இரசகுளிகை பரிசித்தவிடத்துக் களிம்பு நீங்கி நிலையான பொன் ஆகும். அது போலவே சீவனும் சிவனருளைக் கொண்டு அறிவதாகிய சிவஞானத்தாற் பசுத்தன்மை நீங்கிச் சிவத்தின் தன்மையாகிய எண்குணங்களைப் பொருந்தும். சிவமான சீவன் மீண்டும் பசுத்தன்மையைப் பொருந்தாது.

ஏரியிலிருந்து நீங்கிக் கடலைச் சேர்ந்த நீர் ஏரிக்கு மீளுதலில்லை. ஏன் எனின் ஏரிக்கரைக்கு அழிவுண்டு. ஏரிக்கரை அழிந்ததும் ஏரியிலிருந்து நீங்கிய நீர் கடலைச் சாரும். கடற்கரைக்கு அழிவில்லை. ஆதலால் கடலைச் சார்ந்த நீர் ஏரிக்கு மீளுதலில்லை என்க. அவ்வாறே மலசக்திக்கு அழிவுண்டு. மலசக்தி அழிதலால் அநாதி செயற்கையாக மலத்தைச் சார்ந்த உயிர் அதினின்றும் மீண்டும் சிவத்தைச் சாரும். சிவசக்திக்கு அழிவில்லை. அநாதி இயற்கையாகச் சிவத்தைச் சார்ந்த உயிர் அதினின்றும் மலத்திற்கு மீளாது என்றறிக.

ஆன்மா முத்தியடையும்வரை மலமும் அதன் காரியங்களும் அதற்குப் பற்றுக்கோடாக இருக்கும். மலசக்தியானது முத்தியடைந்த ஆன்மாவை விட்டுநீங்கி முத்தியடையாத ஆன்மாக்களைச் சென்றடையும். ஆதலால் மலத்தின் நித்தியத் தன்மைக்கு இழுக்கில்லை.

மலசம்பந்தமில்லாத சிவமும், மலசம்பந்தமுள்ள உயிரும் அநாதியானவை. சித்து என்னுஞ் சாதிப்பொதுமையால் இவ்விரண்டும் ஒற்றுமையுடையன. ஆயினும் மலத்தடை இல்லாமையும், மலத்தடை உடைமையும் ஆகிய வேற்றுமையும் உடையன.

ஏதாவது ஒன்றைச் சார்ந்து அதன் வண்ணமாய் நிற்பது உயிரின் இயல்பு. சார்ந்ததன் வண்ணமாய் நின்று அறியுந் தன்மை

உயிரின் சிறப்பியல்பு. அதனால் என்றும் உள்ள பொருள் என்பது தெளிவாகிறது. மலத்தைச் சார்ந்து அதன் மயமாய் நின்ற உயிர் அதிலிருந்து நீங்கிச் சிவத்தைச் சார்ந்த பொழுது சிவமாய் நிற்கும். நிற்பினும் சிவமாய் நிற்கும் உயிரினின்றும் பொருட்டன்மையால் வேறாகச் சிவம் உண்டு. வேறாயிருப்பினும் சிவம் வேறு; சிவமாய் நிற்கும் உயிர் வேறு எனப் பிரித்து அறிய வராது. பிரித்து அறியமுடியாதெனினும் அறியுந்தன்மையில் வேறுபாடுண்டு. சிவத்திற்கு எல்லாப் பொருள்களையும் ஒருசேர அறியும் தன்மை உண்டு. சிவமாய் நிற்கும் உயிருக்குச் சிவம் ஒன்றினையே அறியுந்தன்மையுண்டு. இவ்வாறு அறிதலிலுள்ள வேறுபாடு பற்றியே இரு பொருளுண்மை கொள்ளப்படும்.

சிவமாய் நின்ற உயிர் எல்லாப் பொருள்களையும் ஒருசேர அறிய முடியாமைக்குக் காரணம் சார்ந்ததன் வண்ணமாம் தன்மை உடைமையேயாகும். உயிர் சாரப்பட்ட பொருளாகிய சிவத்தின் தன்மையினையே அறியும். சிவத்தின் தன்மையாகிய எண்குணங்களும் சிவபெருமானிடம் இயல்பாகவே உள்ளன. அவை உயிருக்குச் சிவத்தைச் சார்ந்தமையால் விளங்குவனவாகும். இயல்பாக உள்ளது உண்மையாதல்; சார்ந்ததால் நிகழ்வது விளங்குதல். உண்மையாதல்வேறு. விளங்குதல் வேறு. ஆதலால் சிவன் அநாதிமுத்தன். சீவன் ஆதிமுத்தன்.

மலரிடத்து இயல்பாக உள்ள தன்மையால் மணம் நிகழும். அதுபோலச் சிவனிடத்து இயல்பாகவுள்ள தன்மையாகிய எண்குணங்களால் எல்லாவற்றையும் ஒருசேர அறியும். மலரைச் சார்ந்த பளிங்கினிடத்து மலரின் தன்மை விளங்கித் தோன்றினும் மணம் நிகழாது. அவ்வாறே சீவன் சிவத்தை அறிந்து சிவத்தின் தன்மையாய் நின்று சிவானந்தம் ஒன்றினையே அனுபவிக்கும். சிவனைப் போல எல்லாவற்றையும் ஒருசேர அறிவதில்லை. ஒருசேர அறியின் சிவானந்த அனுபவத்திற்கு அந்த அறிவு தடையாகும். சிவமாம் தன்மையிற் சீவன் பிறப்பு இறப்பு இல்லாத தன்மையை அடைதலே பயனாகும்.



### 3. பசுவுக்குக் குரு மலத்தை நீக்குதல்

நெய்யானது பாலிடத்துப் பிரிப்பின்றிக் கலந்திருக்கின்றது. ஆயினும் அது வெளிப்பட்டுத் தோன்றாது மறைந்திருக்கும். அது போலவே சிவம் பசுவினிடத்துப் பிரிப்பின்றிக் கலந்திருக்கின்றது. அவ்வாறு கலந்திருக்கும் சிவத்தின் தன்மை மலத்தால் மறைக்கப்பட்டு வெளிப்பட்டு விளங்காமல் இருக்கிறது. ஞானகுரு அம்மலமறைப்பை உயிரின் அகத்தே பொருந்திச் செய்யும் ஞானதீக்கையாலும் புறத்தே பொருந்திச் செய்யும் கிரியாதீக்கையாலும் நீக்குகின்றார்.

நஞ்சு கலத்தலால் மயங்கிக்கிடப்பவனுக்கு மந்திரத்தாலும், மருந்தாலும் விட வைத்தியன் அம் மயக்கத்தைத் தீர்க்கின்றான். அவ்விடவைத்தியன் போலவே சிவமேதானாக விளங்கும் ஞானகுருவும் நிட்டையினால் மலத்தால் மறைக்கப்பட்டிருக்கும் உயிருக்கு உயிராய் நின்று அகத்திற் பொருந்திச் செய்யும் நிருவாண தீக்கையாகிய (அறிவு விளங்கச்செய்யும்) ஞானதீக்கையால் மலமறைப்பை நீக்குகின்றார்.

தொழிலாளி செம்பு முதலிய உலோகங்களை நெருப்பில் வைத்து களிம்பு போகுமாறு மிக ஊதிச் சுத்தமான பொன் ஆக்குகின்றான். அதுபோலவே ஞானகுருவும் மலத்தால் மறைக்கப்பட்டிருக்கும் உயிருக்கு மலத்தை நீக்கிச் சிவமாக்குகின்றார். அவர் புறத்தே ஓமத்தில் மந்திரத்தோடு செய்யும் கிரியாதீக்கையால் அம்மலத்தை நீக்கிச் சிவத்தின் தன்மை உயிருக்கு விளங்கும்படி செய்கின்றார்.

### 4. பாசத்தின் வகையும் விரியும்

ஆணவம், மாயை, கன்மம் எனப் பாசம் மூன்று வகைப்படும். இம் மூன்றும் உயிர் போலக் குணிப் பொருள்களேயாம். எனினும் இவை உயிரின் குணம் போல இருக்கும். இம் மூவகைப் பாசங்களும் அனாதியானவை. உயிரைப் பந்தப்படுத்துதற்கண் ஒப்புடைமையுடையன. பந்தப் படுத்தும் முறைமையில் மாத்திரம் வேற்றுமையுடையன.

செம்பினிடத்துக் களிம்பு அநாதியே கூடியிருக்கும் அதுபோலவே உயிரினிடத்துப் பொருந்திய ஆணவ மலக்குற்றமும், அநாதியே இயல்பாகக் கூடியிருக்கும். இதனைச் சகசமலம் என்பர். இயல்பாகவே உயிரின் அறிவு முழுவதையும் தடுப்பதனால் இது பிரதிபந்தம் எனவும் படும்.

செம்பு ஒரு பொருளாகும். இதன் குணம் பிரகாசம்; குற்றம் மறைப்பு; இக்குற்றத்தைச் செய்யும் பொருள் களிம்பு. இதைப் போலவே உயிரும் ஒரு பொருளாகும். இதன் குணம் அறிவு இச்சை செயல்கள். குற்றம் மறைப்பு. இம் மறைப்பைச் செய்வது ஆணவமலம். இந்த ஆணவம் செம்பிற் களிம்பு போல இயல்பாகவே உயிருடன் கூடியிருப்பினும் உயிரின் குணமன்று. குற்றமேயாகும். குற்றம் ஒரு பொருளின் குணம் போன்றதன்றிப் பொருளாகாது. குணமாவது ஒரு பொருளோடு இயல்பாகவே கலந்திருப்பது அப் பொருள் கெட்டாலன்றி அது கெடாது. குற்றமாவது பொருளோடு கூடியிருப்பது. அப் பொருள் இருக்கும் பொழுதே கெடுவது. ஆனால் பாசமோ உயிரோடு கூடியிருக்கும் குற்றமாகும். அது உயிரின் குற்றமாகாது குணம்போன்றிருக்கும் குற்றமாகும்.

மாயாமலமானது தன் காரியமாகிய நிலம் முதல் கலை ஈறான முப்பத்தொருதத்துவங்களோடும் இடையே வந்து கூடியதாய் இருக்கும். இடையே வந்து கூடி உயிரின் அறிவை ஏகதேசப்படுத்துவதால் இதனை சம்பந்தம் என்பர்.

கன்ம மலமானது நன்மை, தீமை வடிவாயும் சுகதுக்க வடிவாயும், மூலகன்மத்தொடர்புடையதாயும் உயிரோடு கூடியிருக்கும். இடையே தொடர்ந்து விருப்பு, வெறுப்பை உண்டாக்கிச் சுகதுக்கங்களைத் தரும். இதனால் அனுபந்தம் என்பர். மூலகன்மத்தின் தொடர்பினாலேயே உயிருக்கு கன்மமலம் உண்டாயிற்று. தொடர்பினால் உண்டாவது பற்றிக் கன்மமலத்தைச் சாங்குசர்க்கிகம் என்னும் பெயராலும் அழைப்பர்.

பிரவாகித்து ஓடிக்கொண்டிருக்கும் நீரிலே முன்வந்த நீரிது, பின்வந்த நீரிது எனப் பிரித்து அறியமுடியாது. இந்த நீர் பிரவாகம்



போலவே சுகதுக்கங்களைப் அனுபவித்தற்குரிய (எழுவகைத் தாதுக்களால் அமைந்தது) சரீரமும் முன்வந்தது கழியப் பின்னுந் தொடர்பாக வந்துகொண்டேயிருக்கும்.

நாம் நெல்லை விதைத்து ஒரு மாதத்தின்பின்னர் கீரையை விதைத்தோமாயினும் கீரை முன்னரும், நெல் பின்னரும் பயன்தரும். இவ்வாறே கன்ம மலமும் பயன்தரும். செய்யப்பட்ட முறையிலே கன்மம் பயன் தராது. பக்குவமாகும் முறையிலே தான் பயன் தரும். கன்ம பலனை அனுபவித்தலுக்குரிய சரீரங்களுடன் முன்செய்த கன்மத்திற்குரியது இது; பின் செய்த கன்மத்திற்குரியது இது என பிரித்தறிய முடியாது. கன்மங்களின் வன்மை மென்மைகளுக்கு ஏற்பப் பக்குவமாகும் முறைப்படி சரீரம்வரும்.

மாயை இறைவனுக்குரிய பரிக்கிரக சக்தி. இதனால் மாயை இறைவனின் உடைமைப் பொருளாகும். மலச்சேட்டைக்கு ஆற்றாத உயிரின்வருத்தத்தை நீக்கி அவ்வுயிர் இன்புறுதற்கான செயலைக் கூட்டுதல் இறைவனின் கடமை ஆகும். கடமையாகிய செயலும் இறைவனுடைமையேயாகும். ஆணவ மல நிவர்த்தியின் பொருட்டே இறைவன் மாயை கன்மங்களை உயிருக்குக் கூட்டுகின்றார். மும்மலங்கள் இறைவனிடத்தில் உடைமைப் பொருள்களாயிருந்து உயிருக்கு கூட்டப்படுதல் பற்றிக் ஆகந்துக மலம் எனப்படும். ஆகந்ளதுகம் புதிதாய் இடையே வந்தது.

## 5. இறைவன் கன்மத்திற்கு ஏற்ற சரீரத்தைத் தருதல்

உயிர் கேவல நிலையில் ஆணவமலத்தோடு தனித்து நிற்கும். ஆணவத்தின் சேட்டைக்கு ஆற்றாது துன்புறும் துன்ப அனுபவத்தை வெறுக்கும்; சுக அனுபவத்தை விரும்பும். கேவல நிலையில் நிகழும் இந்த விருப்பு வெறுப்புக்களே மூலகன்மம் எனப்படும். மூலகன்மம் அநாதி நித்தியமானது.

கன்மமின்றிச் சரீரம் வராது; சரீரமின்றிக் கன்மம் நிகழாது எனவே மூலகன்மம் காரணமாகவே மாயாகாரியமாகிய சரீரம்

தோன்றும்; தோன்றவே சரீரத்தினால் கன்மமும் கன்மத்தினாலே சரீரமும் தொடர்ந்து உண்டாகிக்கொண்டேயிருக்கும். முன்னர் தேகத்தோடு கூடி ஈட்டப்பட்ட கன்மத்தின் பயனே இப்பொழுது எடுத்திருக்கும் தேகத்துக்குக் காரணமாகும். கன்மம் செய்த, செய்த பொழுதே கெட்டொழியும். ஆதலால் கன்மம் உண்டென்பது அனுமானத்தினாலேயே உணரப்படும். சடமான கன்மந் தனக்குரிய சரீரத்தை தேடி அடையாது. சிற்றறிவுடைய உயிரும் தனக்கேற்ற சரீரத்தை அறியாது. ஆதலால் இறைவனே துணையாக நின்று கண்டித்து ஏற்றசரீரத்தை உயிருக்கு கூட்டுவான். கேவலத்தின் நிகழும் விருப்பும், வெறுப்பும் குழந்தைப் பருவத்திற் பசிக்காற்றாது பாலை விரும்புதல் பேன்றவை. வினைப்பயன்களை அனுபவிக்கும் பிற்காலத்து நிகழும் விருப்பும் வெறுப்பும், குழந்தைப்பருவம் நீங்கிய பின் பசிக்காற்றாது உணவைவிரும்புவது போல்வன; தான் வெறுக்கும் பசியைப் போக்கவும் விரும்பும் உணவைக் கூட்டவும் குழந்தையால் இயலாது. அவற்றை அறிந்த தாயானவள் அவற்றைத் தவிர்த்தலும் கூட்டலும் செய்வாள். செய்யவே தவிர்த்தலும் கூட்டலுமாகிய இரு செயல்களும் தாயின் உடைமைப் பொருளாயின. இவ்வாறே ஆணவத்தின் சேட்டைக்கு ஆற்றாமையால் வருந்தும் உயிருக்கு, அவ்வருத்தத்திலிருந்து நீங்கி இன்புறுதற்கான செயலைக் கூட்டுதல் இறைவன் கடமை. கடமையாகிய அச்செயல் இறைவனுக்கு உடைமையாயிற்று. அச்செயல் தவிரத்தக்கதும் செய்யத்தக்கதும் என இருவகைப்படும். அவ்விரண்டினையும் வரையறுத்து அறிதல் இறைவனாலேதான் ஆகும். சிற்றறிவுனுடைய உயிராலாகாது. இதனாலும் அவ்விரண்டும் இறைவன் உடைமைப் பொருளாதல் தெளிவு.

மூலகன்மங் காரணமாக மாயா காரியமாகிய சரீரத்தையும், அச்சரீரத்தைக் கொண்டு செய்யப்படும் இதம் அகிதம் என்னும் இருவினைகளையும் இறைவன் தந்தருளுவான். பின்னர் உடலும் வினையும் ஒன்றுக்கொன்று காரணகாரியமாய்த் தொடர்ந்துவரும், கன்மம் இறைவனது உடைமைப் பொருள். ஆதலால் எந்தச் செயலையுஞ் சிவதொன்டெனக்கருதிச் சிவார்ச்சனையாகசெய்தல் வேண்டும். அவ்வாறு செய்யின் அதுவே இருவினை ஒப்பாகும்.



அதனால் மலசத்தி தேய்ந்து திருவருள் விளங்கித் தோன்றும். இவ்வாறு சிவார்ச்சனையாக வினைகளைச் செய்யாது யான் செய்தேன் என்னும் முனைப்புடன் செய்யின் வினைப்பயன் செய்தவனைச் சாரும்; சாரவே கன்மத்தாற் சரீரம் உண்டாகும். கன்மத்திற்காக வந்த சரீரம் அழியும்பொழுது, வேறு கன்மம் பக்குவப்பட்டிருப்பின் அந்தக் கன்மத்திற்கேற்ற சரீரத்தையும் உலகத்தையும் உயிர் பொருந்தும். இவ்வாறு இடையீடின்றி நிகழினும் நிகழும். சரீரம் அழியும் காலத்துக் கன்மம் பக்குவப்படாதிருப்பினும் இருக்கும். அத்தகைய காலத்திற் கன்மம் பக்குவப்படும்வரை இறைவன் தநுகரணாதிகளை ஒடுக்கி வைப்பான். இது பிரளயம் எனப்படும். பக்குவமான பொழுது அவற்றை இறைவன் கூட்டுவான்.

### 6) உயிர் உடம்போடு கூடிப் பிறந்து, இறந்து திரியும் முறைமை.

சிவம் எங்கும் பரிபூரணமாய் விளங்குந்தன்மையுடையது. உயிர் சார்ந்ததன் தன்மையாகும் இயல்பினது. அது சிவத்தைச் சார்ந்தே சருவ பரிபூரணனாந் தன்மையைப் பெறும். சிவமும் உயிரும் சித்தென்னுஞ் சாதிப் பொதுமையால் ஒத்த தன்மையுடையன. ஆயினும் சிவம் தானே அறியும் சித்து; உயிர் அறிவிக்க அறியும் சித்து- இதனால் சிவத்தைத் தந்தை என்றும், உயிரை மகன் என்றும் கொள்வர். தந்தைக்கு உரியன எல்லாம் பெறுதற்கு உரியவன் மைந்தனே. சிவத்தின் தன்மையாகிய எண்குணங்களும் தன்பால் விளங்கி சிவானந்தத்தை அநுபவிக்கும் உரிமை உயிருக்குக்கிட்டுவது இந்த முறையினாலேயாகும்.

உயிர் தாயின் கருப்பத்துள் இருக்குங்காலத்தில் அவ்விடத்துப்படும் துன்பத்துக்காற்றாது வருந்தும்; இத்தகைய பிறப்புத்துன்பம் இனியுண்டாகாத வண்ணம் அருள்புரியுமாறு இறைவனைப் பிரார்த்திக்கும். பிறந்தபின் தனுகரணாதிகளைத் துணையாகக்கொண்டு மலத்தை நீக்கிக்கொள்ளும் முறைமையை

வேதாகமங்களிற் கற்றுணர்ந்து வேதாகம வழி ஒழுகும்; தன்னையும் தலைவனையும் உணரும் பாசச்சார்பை விட்டுச் சிவத்தைச்சாரும்; எங்கும் பரிபூரணனாய் நிற்கும் சிவத்தின் தன்மையைப் பெற்று சிவமாய் விளங்கும்.

அனாதியே மலத்துட்கிடந்து வருந்தும் உயிருக்கு இரங்கி இறைவன் தனுகரணாதிகளைக் கொடுத்தருளுகிறார். மாயாகாரியமாகிய சரீரம் மறைவும் தோற்றமும் உடையது. சரீரத்தின் உறுப்புக்களாகிய தோல், நரம்பு, என்பு முதலியன பூதபரிணாமத்தால் ஆனவை: அவை மாதாவின் கருப்பத்துள் உருவமாக அமைந்தமைகக்குக் காரணமான தந்தையின் வீரியம் உணவின் சாரமாகும்;· மாதாவால் உண்ணப்படும் சாரத்தால் அங்கு அவை வளரும். வெளியே வந்த பொழுது தன்னாலுண்ணப்படும் உணவின் சாரத்தால் வளரும். உருவமைதற்கும், வளர்தற்கும் நிலைத்தற்கும் அன்னம் காரணமாதலால் தூல உடல் அன்னமயம் எனப்படும்.

அன்னமெனப்படும் ஆகாரத்தாலுண்டாகும் பரிணாமத்தால் வீரியம் உண்டாகும். அவ்வீரியத்துக்குத் தகுந்தவாறு பொருந்தும் விடயக்கூட்டதின் குற்றத்தாலும், அவ்வீரியத்துக்குத் தக்க குணத்துடன் கூடுஞ்சார்பினாலும் உயிர் மாயாகருவிகளாற் கட்டப்படும். வேதாகம வழி ஒழுகாது யான் எனது என்னுஞ் செருக்குறும். தன்னையும் தலைவனையும் உணராத பிழையை நீங்கி உய்திபெறச் செய்தல் தந்தையை அனைய இறைவனின் கருணையேயாகும்.

தந்தையின் கடன் மகனை நல்வழிப்படுத்தலே ஆகும். படுத்துங்கால் நன்னெறிதவறின் அதற்குத்தக ஒறுத்தலும் தந்தையின் கடனாகும். அங்ஙனம் ஒறுத்தலும் நல்வழிப்படுத்துதற் பொருட்டேயாகும். அதுவும் அறமாவதேயன்றி மறமாகாது. தந்தையானவன் மகனிடத்துப் பிழைகண்டால் அவனை ஓரிடத்துக் கட்டிவைக்குமாறு போல எல்லா உயிர்களுக்குஞ் சுகத்தைச் செய்யும் இறைவனும் மதர்ச்சார்புள்ள உயிரைப் பிறப்பு இறப்புக்களில் கூட்டுவான்.



தந்தை தாய் பெற்ற தத்தம் புதல்வர்க டஞ்சொலாற்றின்
வந்திடா விடினுறுக்கி வளாரினா லடித்துத்தீய
பந்தமுமிடுவ ரெல்லாம் பார்த்திடிற் பரிவேயாகும்
இந்தநீர் முறைமையன்றோ வீசனார் முனியுமென்றும்

-சித்தியார்

## 7. ஆன்மா அதுவதுவாய் நிற்குமாற்றால் அறுவகைப் படுதல்

ஆன்மா சார்ந்ததன் வண்ணமாந் தன்மையுடையது; இது தன்னாற் சாரப்படும் பொருட்பேதங்களினால் பூதான்மா, அந்தரான்மா, தத்துவான்மா, சீவான்மா, மந்திர ஆன்மா, பரமான்மா என அறுவகைப்படும்.

தூலபூதங்கள் ஐந்து, காரணதன்மாத்திரைகள் ஐந்து, விடயங்களிற் சென்று அதுவதுவாகப் பரிணமிக்கும் முக்குணவிரிவுடைய அந்தக்கரணம் ஆகிய இவற்றின் கூட்டமே தூல உடம்பு ஆகும். பூத பரிணாமமாகிய தூல உடம்பு உயிரால் அதிட்டிக்கப்படுவதாகி அங்ஙனம் அதிட்டித்து அதுவதுவாய் நிற்கும்போது ஆன்மா பூதான்மா எனப் பெயர் பெறும். பூதந்தவிர்ந்த ஏனையவற்றிற்கு அதிட்டிக்கப்படும் தன்மை இருத்தலின் அவற்றுடன் ஆன்மா கூடி அவ்வப்பெயரைப்பெறும். பரமான்மாத் தன்மையை அடைவதன்மேல் ஆன்மாவுக்கு அடையப்படுவதாய் நிற்பது வேறோன்றுமில்லை.



## 8) பதிப்பொருளின் இலக்கணம்



மேலான இறைவன் தடத்த நிலைபற்றிப் பதி என்று சொல்லப்படுகின்றான். அவன் மந்திரங்களைத் தனக்குச் சரீரமாக உடையவன். ஈசானாதி ஐந்து மந்திரங்களும் பதிக்குத் திருமேனியாக அமையும். ஈசானம் சிரசாகவும், தத்புருடம் முகமாவும், அகோரம் இருதயமாகவும், வாமதேவம் நாடியாகவும், சத்தியோசாதம் முழந்தாளகவும் அமைந்த திருமேனியை (மந்திரங்களைச் செபிப்பதுடன்) பூசைசெய்ய விரும்புவோர் பூசிப்பர்,

பூசிக்கும் முறையும் இதுவேயாகும். இம்மந்திரத்திருமேனி ஐந்தொழிலையும் ஆற்றும். ஈசானம் அருளலையும், தத்புருடம் மறைத்தலையும், அகோரம் அழித்தலையும், வாமதேவம் காத்தலையும், சத்தியோசாதம் படைத்தலையும் செய்யும். மந்திரங்களினால் வழிபடுவோருக்கு அம்மந்திரங்களின் இடமாக விளங்கித் தோன்றுவன். எல்லா மந்திரங்களுக்கும் அதிட்டான கருத்தாவாயும் இருப்பவன், எந்த எந்தத் தெய்வங்களை எந்த எந்த மந்திரங்களினால் வழிபடினும் அவ்வத் தெய்வங்களுக்கு அதிட்டிக்குந் தலைவனாய் நின்று அம்மந்திரங்களில் விளங்கித் தோன்றுவன். படைப்பாதி ஐந்தொழிலையும் ஆன்மாக்களின் பொருட்டே என்றும் மேற்கொள்ளுகின்றான்.

மந்திரம் முதல் கலையீறாகிய ஆறு அத்துவாக்களையும் திருமேனியாகக் கொண்டருளுகின்றான். அத்துவா மூர்த்திக்கு சாந்தியாதீதகலை திருமுடியாகவும், சாந்திகலை திருமுகமாகவும், வித்தியாகலை மார்பாகவும், பிரதிட்டாகலை குய்யமாகவும், நிவிர்த்தி கலை முழந்தாளாகவும் அமையும். இவ்வாறு ஐந்துகலைகள் உறுப்புக்களாகவும், மந்திரம் இரத்தமாகவும், பதம் நரம்பாகவும், வன்னம் தோலாகவும், தத்துவம் தசையாகவும், புவனம் உரோமமாகவும் திருமேனி கொண்டருளுவான்: எல்லாப்பொருள்களோடும் கலந்து அதுவதுவாய் நிற்கும் நிலைபற்றியே சித்து உருவமான முதல்வனுக்குச் சடமான அத்துவாக்களும் திருமேனியாயின. இவ்வாறு திருமேனி கொள்ளும்போது அத்துவாமூர்த்தி எனப் பெயர் பெறுவர். அத்துவாக்கள் ஒவ்வொன்றின் பெயராலும் அர்ச்சிக்கப்படுவன். அத்துவாக்கள் சொற்பிரபஞ்சம், பொருட்பிரபஞ்சம் என இருவகைப்படும். இறைவன் பொருட்டன்மையால் வேறாகி இருவகைப் பிரபஞ்சங்களுக்கும் ஆதாரமாய் நிற்பன். வேறாய் நிற்கும் போதே அப்பிரபஞ்சங்கள் தொழிற்படுத்தற்காக உடன் நின்று செலுத்தும் உதவி புரிவன்.

உயிர்கள் வேண்டுவன எல்லாவற்றையும் வரையாது கொடுக்கும் வள்ளலும் இவனே. பெத்த நிலையில்



உலகபோகங்களையும் முத்திநிலையில் பாசநீக்கம் சிவப்பேறு ஆகிய இரண்டினையும் கொடுத்தருளுவன். இவை அருளல் என்னும் தொழிலில் அடங்கும். பெத்தான்மாக்களுடன் முதல்வன் ஒன்றாயும், வேறாயும், உடனாயும், வெளிப்படாமல் நின்று ஐந்தொழில் புரிவான். வெளிப்படாமல் நிற்கும் நிலையில் திரோதான சத்தி எனப்படும். முத்திநிலையில் ஆன்மாக்களுடன் இறைவன் ஒன்றாயும் வேறாயும் உடனாயும் வெளிப்பட்டு நிற்பன். அங்ஙனம் நிற்குங்கால் பராசக்தி சொரூபமாக விளங்கித் தோன்றுவன். ஞானசத்தி, கிரியாசத்தி இரண்டையும் சமமாகப் பொருந்தியும் நிற்பான். இந்நிலையில் அருவுருவமாகிய வடிவைப் பெறுவான். அருவுருவென்பதில் உருவம் தூலப்பொருள்களோடு கலந்து அதுவதுவாய் நிற்றலையும், அருவம் பொருட்தன்மை பற்றி வேறாய் நிற்றலையும் குறிக்கும்.

அருளாகிய மனோன்மணியென்னும் சக்திக்கு இவனே நாயகன். இவ்வாறெல்லாம் விளங்கும் இறைவனே சதாசிவன் எனப்படுபவன் ஆவன்.

## 9. சிவம் என்னும் பொருளின் இலக்கணம்

சிவம் என்னும் திருநாமம் பரமசிவனையே குறிக்கும். பரமசிவன், சதாசிவனென்று சொல்லப்படும் பதிக்குமேலானவன், இயல்பாகவே பாசங்கள் இல்லாதவன்; (அதனால் பாசங்காரணமாக உண்டாகும் பிறப்பு, இறப்பு ஆகிய) பிறவி நோய் இல்லாதவன். (பாசமும் பிறவிப் பிணியுமுடைய பசுக்களுக்குத் தான் ஆதாரமாதல்போல) தனக்கு ஓர் ஆதாரம் இல்லாதவன்; (மாயையின் காரியத்திற்குள்ள உருவமும், பெயரும் போல) மாயை தருகின்ற வடிவமும், நாமமும் இல்லாதவன்; இயல்பாகவே எல்லாம் அறிபவன். (அறிவதனால் உண்டாகும்) விருப்பு வெறுப்பு என்னும் விகாரம் இல்லாதவன்; (விகாரமற்ற சாந்தசொரூபியாயினும் ஒடுங்கியிராது) எங்கும் நிறைந்து நிற்பவன்; (அவ்வாறு நிறைந்து நிற்கும் நிலையிலே கலப்பால் ஆன்மாக்களுடன் ஒன்றாகி) எல்லா

ஆன்மாக்களுக்குந் தானாயிருப்பவன். (ஆயினும் பொருட்டன் மையால் வேறாகி) எல்லா உயிர்களிடத்தும் அருள் நோக்கம் செய்பவன். உயிர்களோடு ஒன்றாயும் வேறாயும் நிற்பினும் உயிர்களது சித்தம் முதலிய) கருவிகளால் அறியப்படாதவன்; உயிரினது சூக்கும அறிவால் அறிய முடியாத அதிசூக்கும அறிவுருவினன்; (அறிவுருவாகிய உயிர் தனித்து நில்லாது யாதேனும் ஒன்றைப் பற்றிநிற்பது போன்று பற்றி நிற்கும்) பற்றுக்கோடில்லாதவன்.

இவ்வியல்பை எக்கலாத்தும் இயற்கைத் தன்மையாயுள்ளவன். முத்தி நிலையில் தன்மையாற் சிவமான உயிரினும் வேறாய் நிற்பதால் ஒப்பற்றவன், தனது சத்தியினிடத்து இயல்பாயுளதாகிய இத்தன்மைகளான அளவில்லாத ஆற்றலுடையவன். பசுவின் சத்தி, மலத்தின் சத்தி, மாயையின் சத்தி என்பன தன்னிடத்து வியாப்பியமாயடங்கிஇருக்கத் தான் அவற்றுடன் கலந்து வியாபகமாக நிற்பவன்.

இத் தன்மையுடையானை அறிய விரும்புவோர் அவனருளுளைச் சார்ந்து நின்று அறிய வேண்டும். அன்றிப் பிரமாணங்களால் அறியப்படாதவன். (பிரமாணங்களால் அறியமுடியாத இவனுக்கு அநுமானப் பிரமாணத்திறுதியிற் கூறி முடிக்கும் உவமை கிடையாது; ஆதலின்) உவமைகளில் வைத்து அறியப்படாதவன்; ஆயினும் (கேட்போருக்கு மனவெழுச்சி உண்டாகுமாறு உவமையில் வைத்து உணர்த்துங்கால்) எள்ளும் நெய்யும்போல, சரம் அசரம், ஆகிய எல்லாப் பொருள்களின் உள்ளும் புறமும் கலந்து அவற்றின் மேலாய் விளங்குபவன் என்று கூறலாம்.



# சுவரன்மா சாட்சாத்காரப் பிரகரணம்

## 1. சிவனை அடைதற்கு உபாயம்

சத்தியப்பொருள் பிளவற்றதாய், எப்பொருளினுள்ளும் வியாபித்து நிற்பதாகவும், அதிநுண்ணியதாகவும், மனத்தினால் கிரகிக்க முடியாததாகவும் இருப்பினும், அத்தகைய சத்திய சொருபத்தை அடைதற்குரிய வேறொரு உபாயம் உனக்குச் சொல்கிறேன்.

எதனைக் கேட்டுப் பரோட்சமாயறிவதால், அபரோட்சஞானம் உண்டாகுமோ, எதனை அபரோட்சமாயறிந்தோன் சிவனேயாவானோ, எது எவர்க்கும் என்னால் சொல்லப்பட்டதன்றோ, அந்த ஞானசொருபத்தை இன்று நீ என்னிடத்திருந்து கேட்பாயாக.

இந்த விஞ்ஞானம் குருசிட பரம்பரையில் உபதேசிக்கப்பட்டு வந்ததாகும். இது பிறப்பிறப்புப் பந்தத்தின் விடுதலையாகிய வீடுபேற்றிற்குக் காரணமாகும். ஆதலால் அனைத்தினும் மேம்பட்டதாகும். இதன் பார்வையோ எவ்விடத்தும் உள்ளதேயாகும்.

## 2. சிவஞானத்தால் அபேதமாய் நின்று நினைதல்

எல்லாப் பொருள்களிலும் இயல்பாயிருக்கின்ற சுயம்பிரகாசன் எவனோ, வாக்கும் மனமும் நாமமும் அற்றவன் எவனோ, அகில காரணனாகிய அவனே நானென்று பேதபாவனை ஒழிந்த உள்ளத்தால் சிவசிந்தனையை நீ இடைவிடாது செய்.

எக்காலத்தும் நிலையாகவுள்ளதாய், அழிவற்றதாய், எவ்விதவேறுபாடுமடையாததாய், இத்தன்மையது எனச் சிந்திக்க முடியாததாய், எங்கும் கலந்து வியாபித்துள்ள நிட்களமான ஞானமெதுவோ அதுவொன்றே தனக்கு மூலகாரணமோ உவமையோ இல்லாததாய் பிரகாசிக்கின்றது எனத் தெரிந்துகொள்.

நினைப்புக் கெட்டாமலும், ஐயத்துக்கிடங்கொடாமலும் அடையாளமற்றதாய், அழிவற்றதாய், எங்கும் நிறைந்த சாந்திமயமாய் எல்லாவிடயங்களும் நீங்கிய விடத்திற்றானே பிரகாசிக்கின்ற ஞானம் (அறியத்தக்க பெருள்) எதுவோ அதுவே நான்; இதிற் சந்தேகமில்லை.

அந்த முதற்கடவுளாகிய பரமசிவன் நானே. சகல மந்திர சொரூபியும் நானே. அம்மந்திரங்கள் எல்லாவற்றிற்கும் அப்பால் சங்காரம் சிருஷ்டி முதலிய கிருத்தியங்கள் இல்லாமல் இருப்பவனும் நானே.

அறிபடுபொருளும், அறியப்படாதனவும், தாவர சங்கமங்களும் என்னால் வியாபிக்கப்பட்டுள்ளன. நானே உலகத்தின் தலைவன். எல்லாப்பொருள்களும் என்னாலேயே பிரகாசிக்கின்றன.

பலவிதமான உருவபேதத்தால் வேறுவேறாகிய புவன வரிசைகள் பொருந்தி சிவதத்துவம் முதல் இப்பூலோக பரியந்தம் தன்னுளடங்க விளங்கும் சிருஷ்டியின் பொருள்களனைத்தும் என்னில் நிலைபெற்றிருக்கின்றன.

இவ்வுலகில் எவ்வளவு விசயங்கள் காணக் கூடியனவோ, எவ்வளவு விசயங்கள் கேட்கக் கூடியனவோ, தேகத்தின் உள்ளேயும் புறத்தேயும் சம்பந்தப்படுத்திக் கொண்டு தோன்றுகின்ற அவ்வெல்லாப் பொருள்களும் எங்கும் வியாபித்துள்ள என்னால் வியாபிக்கப்பட்டுள்ளன. என உணர்.

நான் (உடலல்ல) ஆன்மாவே என்று எண்ணினாலும் அதீதனாம் பரமான்மா என்று தான் அடையவிரும்புகின்ற சிவன் தனக்கன்னியமாயிருக்கிறான். (அவனினும் தான்வேறே) என்று மயக்கமுற்று, இவ்வாறு சிவனை வழிபடுபவன் அவ்வித உபாசனாபலத்தால் சிவத்துவம் அடையமாட்டானென்றறி,

சிவன் எனக்கன்னியனேயாவான். நான் சிவனுக்கன்னியனே என்னும் பேதபாவனையை மனத்திலிருந்து வேருடன்



பிடுங்கியெறிக.பரமான்மாவாகிய சிவன் யானேயென்னும் அத்துவிதமாகும் இந்த அபேதபாவனையையே எப்பொழுதும் பழகிக்கொள்.

அத்துவித பாவனையே இடைவிடாமற் பயில்பவனாய் எவ்விடத்தும் எப்பொழுதும் தனதான்மாவில் நிலைத்து நிற்கின்ற அவன் எல்லாப்பொருள்களிலும் எல்லாவுடல்களிலும் அந்த முதற்பொருளாகிய சிவனையே காண்பான். இதில் சந்தேகமில்லை.

இந்த ஏகான்ம பாவனையையே எப்பொழுதும் இடைவிடாமற் பற்றியிருப்பவன். (அப்பாவனாபலத்தால்) விஷயவிருப்பமும், பேதபாவனையும் ஒழிந்தவனாவான். அந்த யோகிக்கு அனைத்தையும் செவ்வையாயுணர்தல் சித்திக்குமென்று பிரசித்தி பெற்ற வேதங்களிற் சொல்லப்பட்டிருக்கிறது என்பதை அறி.

சாத்திரங்கள் யாவிலும் பிறப்பிலான் என்றும் ஈசன் என்றும் துதிக்கப்படுபவன் எவனோ அத்தகைய தேகமில்லாதவனும் குணமில்லாதவனும் ஆன்மாவுமாகிய அவனே நானாயிருக்கிறேன். இதிற் சந்தேகம் சிறிதும் இல்லை.

தனதுண்மையாகிய 'சிற்சொருபத்தை அறியாதவனே சிருட்டிக்கப்பட்டிருத்தல் முதலாகிய தருமங்கள் (நன்மைகள்) பொருந்துதற்குரிய பசு ஆவான். தனது உண்மையாகிய சிற்சொருபத்தை எவன் அறிகின்றானோ அவனே எக்காலத்துமிருக்கும் நித்தியனும், மலமற்ற சுத்தனும், சிவனுமாவான் சந்தேகமில்லை தெரிந்துகொள்.

ஆகையால் விவேகிகளாயிருப்பவர்கள் நிதமும் நன்றாய் விசாரித்து, நேரே (அபரோட்சமாய்) அறியத்தக்கதாகும் ஆன்மா. அவ்வான்மாவே பரா அபரபேதத்தாலும் தூலசூக்கும பேதத்தாலும் இரண்டு விதமாகப் பிரகாசிக்கின்றது. முற்றிலும் நிர்வாணமாயிருக்கும் (திருசியமற்றுச் சூனியமாயிருக்கும்) ஞான சொரூபமே பரம் ஆகும். அபரம் என்பது சிருஷ்டி முதலிய

ஐவகைத் தொழில்களோடு கூடிப்பிரகாசிக்கும் ஞானசொரூப (சகுணப் பிரமம்)மாகும். அந்த ஆன்மாவின் மந்திர வடிவை அதன் தூலவடிவமென்று சொல்லுவார்கள். அவ்வான்மாவின் சூக்கும சொரூபமோ, அன்புமாறாத, அதாவது ஆன்மாகார விருத்தியொன்றே பிரகாசிக்கும் சித்ததில் நிலைத்துள்ளதென்று அறிந்துகொள்.

ஆறுமுகனே! சித்தத்திலுள்ள அவ்வான்மாவை உணராமல் முடிவற்ற விதங்களில் யார் எதை எடுத்துச் சொல்லியும் பயனென்ன? சொல். அதுவெல்லாம் ஆச்சரியத்தைக் கொடுக்கத்தக்க சொற்சாதுரியமே; புத்திமயக்கத்திற்குக் காரணமென்றறிக.

குணங்களும் குணிகளும் ஆன்மாவில் தங்கியிருக்கின்றன. சீவன் தன் சங்கற்பத்தால் எதனையும் சிருஷ்டிக்கின்றான். மனத்தினால் அந்தந்தக் குணத்தை ஏகாக்கிரமாய் எப்பொழுதும் நினைத்து நினைத்துத் தன்னால் நினைக்கப்பட்ட அவ்வக்குணத்தை (பொருளை) அடைகிறான் என்பதில் ஐயமில்லை.

சாத்திரங்கள் சொல்லுகின்ற எல்லா விடயங்களையும் கூட்டிச்சுருக்கி ஆன்மவிஞ்ஞானம் இப்படிபட்டதென்று என்னாலே சொல்லப்பட்டது. எவ்விதத்தும் சர்வமும் ஆன்ம மயமென்றுணர்ந்து ஆன்மசிந்தனையில் வல்லவனாய் என்றென்றும் வாழ்.

தேவதைகளின் ஆராதனையோ வேதபாராயணமோ, அக்கினியிற் செய்கின்ற யாகங்களோ, அந்த யாகங்களைச் செய்கின்ற வகைகளிற் பலருக்கும் சேரக் கூடிய தட்சிணைகள் கொடுத்தலோ, இவைகளையொத்த எவ்வகைக் காரியங்களோ அவ்விடத்தில் (ஆன்ம சொரூபானுபூதியில்) இல்லை. நிர்மலமாய், எங்குமுள்ளதாய், ஸ்திரமாயிருக்கின்ற அத்தகைய ஆன்ம விஞ்ஞானத்தையே நீ அடை.



மீண்டும் மீண்டும் பிறந்திறக்கும் சம்சாரசாகரத்தில் முழுகிப் புகலிடம் தேடியலையும் சீவனுக்கு அப்புகலிடமருள்வது அந்த ஆன்மா விஞ்ஞானத்தையல்லாமல் வேறொரு பொருளும் இல்லை என்றே அறி.

அப்பரமான்மாவை அதுவேதானாய் அஃதுண்மையா உள்ளவாறே எவன் உறுதியாயுணர்வானோ, அவன் எல்லாவித அவத்தைகளையும் அடைந்த போதிலும் ஒரு முயற்சியுமில்லாமலே முத்தியடைவானென்று அறிந்து கொள்.

ஆன்மலாபத்திலும் சிறந்த வேறு லாபம் எதுவும் எங்குமேயில்லை. ஆகையால் நீ எப்போதும் ஆன்மாவையே உபாசனை செய். இந்தத் தேகத்திலுள்ளவன் போன்ற ஆன்மா எவனோ, அவனே எங்கும் ஏகமாய்ப் பொருந்தியிருக்கும் பரமான்மாவாகுமென்றறி.

ஆன்மா பிராணனல்ல, அபானனுமல்ல, அவ்வாறே அவைகட்கு மேலாகிய பொறிமனமாகிய கருவிகரணங்களில் எதுவுமல்ல அது அனைத்தையும் அறிகின்றதாய், நித்தியமாயுள்ள பரிபூரணவஸ்துவேயாகும். எப்போதும் நீ அவ்வான்ம சிந்தனையையே உள்ளத்தே தரித்திரு.

எல்லா ஒளிகளுக்கும் ஆதாரமாய் ஒளியை அளிக்கும் களங்கமற்ற அந்த ஆன்மாவில் மேலான பிரகாசம் உள்ளிலோ வெளியிலோ உள்ளவோர் தனியிடத்திலில்லை. வெகு தூரத்திலோ சமீபத்திலோ உள்ளதொரு தனியிடத்திலும் இல்லை: அது எவ்விடத்தும் வியாபகமாய் நிறைந்து பிரகாசிக்கின்றது: அதன் கண்ணே உன் சிந்தனையை எப்பொழுதுஞ் செலுத்து.

பகுக்கப்படுகின்ற குறுக்கிலும் நெடுக்கிலும் மேலும் கீழும் உள்ளும் புறம்பும் எல்லாவிடங்களிலும் எப்பொழுதும் நிலைத்திருக்கும் சூனியமாய், வேறொரு ஒளியின் தேவையின்றி சுயமாகவே பிரகாசித்துக் கொண்டிருகிற ஆன்மாவையே என்றும் நீ மேன்மேலும் தியானி.

அவ்வான்மா சூனியமுமல்ல, அசூனியமுமல்லதாம். அசூனியமுமாகும், சூனியமுமாகும். தானே எவ்விடத்தும் வியாபகமாய்ச் சிறிதேனும் பக்கச் சார்பற்றுள்ள அவ்வான்மாவையே சதாகாலமும் சிந்தனைசெய்.

மலமென்னும் நோயற்றதாய், தனக்குப் பிறிதொரு ஆதாரமுமில்லாததாய், சாதியும் நாமரூபங்களும் சாராதிருக்கின்ற அந்த நிஷ்களங்க நிர்க்குண ஆன்மாவை நீயும் இடைவிடாமற் தியானி.

தன்னைப் பற்றித்தாங்குகின்ற பொருளுமில்லாததாய், தான் பற்றித்தாங்குகின்ற பொருளுமில்லாததாய், தனக்கு உவமானம் ஏதும் சொல்லமுடியாததாய், மலமற்ற சுபாவம் வாய்ந்ததாய், நித்தியமாய், பிரமாணங்களைக் கொண்டறியவொண்ணாததாய் நிலைத்திருக்கும் ஆன்மாவை எப்போதும் மகிழ்வுடன் தியானி.

கருமங்கள் எல்லாவற்றையும் விட்டொழித்து, ஆசைகளையும் அறவொழித்து, சனசமூகத்திலிருந்து விலகி, பிறகு எப்போதும் தன்னிலேயே உள்ள தன்னையே தன்னிடத்திலேயே தன்னைக் கொண்டே தியானிக்குக.

நாடு, சாதி, உலக வழக்கிலுள்ள குலம், ஆச்சிரமம் முதலாய இவைகளை அநுசரித்து மனத்திற் பொதிந்துள்ள அநேக வித எண்ணங்களையெல்லாம் ஒழித்து தனது சொரூபத்தின் தியானத்தையே விவேகி நீங்காதெப்பொழுதும் செய்யக் கடவன்.

இதுவே மந்திரமாகும். இதுவே தேவதார்ச்சனை ஆகும். இதுவே தியானம் என்று சொல்லப்படுவதுமாகும். இதுவே தவமுமாகும். ஆகையால் எண்ணங்கள் அனைத்தையும் ஒடுக்கி சுவசொரூப சிந்தனையொன்றையே நீ துணிந்து செய்.

நான் எண்ணமில்லாதவனாகும், எண்ணங்களோடு கூடியுள்ள மனத்தை எண்ணுதற்கு ஒரிடமும் கிடைக்காததாகச் செய்.



அனைத்தையும் ஓயாது நினைக்கின்ற மனத்தை ஆன்மாவிலேயே நிலைபெற நிறுத்தி மற்றொன்றையும் மனத்தினால் நினையாதிரு.

அவ்வான்மா சிந்திக்கக் கூடிய வஸ்துவல்ல, சிந்திக்கக் கூடாததுமல்ல, அது சித்தமன்று. அதுவே சித்தமுமாகும். எந்தவொரு பக்கத்திலும் சாருதலின்றி எங்கும் சமமாய் வியாபித்துள்ள பரமான அவ்வான்மாவை எப்பொழுதும் தியானி.

மனத்தை விஷயப் பற்றற்றதாக நிலையுறச் செய்து மனத்திற் கெட்டாததாகிய அவ் வான்மாவையே நீ எப்பொழுதும் தியானி. தத்துவங்களெல்லாங் கடந்துள்ள அக் களங்கமற்ற ஆன்மாவின் கண் எந்த சுகம் பரிபூரணமாய் சித்தித்திடுமோ அது திரிபற்றதாய் நினைக்கமுடியாததாய் தனக்கு மூலமானதெதுவுமில்லாததாய் திருஷ்டாந்த உபமானமெதுவுமில்லாததாய் முடிவற்றதாய் விளங்கும். அதுவே அனைத்திலும் மேலான பரமானந்தமென்று சொல்லப்படுவது. அதனில் நீ மூழ்கு.

விடய வாசனைகளெல்லாவற்றையும் அறவொழித்து மனத்திற் பரந்தோங்கும் நினைவுகளையெல்லாம் நீக்கு. எப்பொழுது மனம் எந்நினைவுமற்ற மோனநிலை எய்துமோ அப்பொழுது அத்துவிதத் தன்மயமாய்த் திகழும். அதுவே பரமானந்தம் எனப்படும். எல்லாத்திக்குகளும், எல்லாவிடங்களும், எல்லாக்காலங்களும் ஆன்ம மகா யோகத்திற்கு ஏற்றவையே என்று நூல்கள் சொல்லுகின்றன. சீவர்கள் அடைகின்ற வர்ணாச்சிரம மாதிய பேதங்களால் அவர்களது ஞானசொரூபத்தில் அற்பமாத்திரமேனும் பேதம் சாராதென்றறி.

பசுக்கள் பலவித நிறங்களுடையன எனினும் அவ்வெவ்வேறு நிறப் பசுக்களின் பாலெல்லாம் ஒரு நிறமே. பலவிதமான குணங்களையும் உருவங்களையுமுடைய உயிர்களெல்லாம் பலநிறப்பசுக்களை ஒத்தன. அவ்வுயிர்களினுள்ளேயுள்ள ஏக ஞானசொரூபம் பாலின் ஒரே நிறத்தைப் போன்றதாகுமென்று விவேகிகள் அறிகின்றார்கள். இது எல்லாச் சீவர்களுக்கும் ஞானசொரூபம் ஒன்றே என்பதற்கு உவமானமாகும் என்றறி.

அந்தப் பிரமசொரூபம் எல்லாப் பொருள்களிலும் பொருந்தி வியாபித்து எங்கும் முகமுள்ளதாகப் பிரகாசிக்கின்றது. உள்மனத்தை அப்பிரமத்தில் ஒய்வில்லாமல் எப்பொழுதும் நிலைக்கச்செய்து தேசம் திக்கு முதலிய பேதங்களைச் சிந்தியாதிரு.

இப் புவியில்-இங்கேயே-அந்தப் பரமான்மாவின்கண் நிலையுற்ற சீவன்முத்தனுக்கு ஒரு அடையாளமுமில்லை. ஒரு ஆச்சிரமுமில்லை. ஒரு ஆசாரமுமில்லை. அந்தத் தீரபுருஷன் ஒன்றைச் செய்ததனால் அதனினின்றும் அவனுக்கு யாதோர் பிரயோசனமுமில்லை. அவன் செய்ததாகக் கருமமும் ஏதுமில்லை. இதைச்செய்க என்னும் வேதவிதியும் அவனுக்கில்லை என்றறி.

நடக்கினும் நிற்கினும் நித்திரை செய்யினும் விழித்திருப்பினும் போசனம் பண்ணினும் நீர் குடிக்கினும் பெருங்காற்று கடுங்குளிர் கொடும் வெய்யில் ஆகியவை தாக்குகின்ற காலத்திலும் வெறெவ்வித அவத்தையிலும் எக்காலத்திலும், பயமும் தரித்திரமும் ரோகங்களும் எரிக்கின்ற சுரமும் மாந்தமும் நேரிடுங் காலங்களிலும் ஆன்ம நிஷ்டனாய், சாந்தனாய், பாகுபாடற்றவனாய், ஆன்மதிருப்தனாய் இருப்பவன் சற்றும் கலக்கமடைய மாட்டான்.

போனாலும் வந்தாலும் நான் போனவனுமாகேன் வந்தவனுமாகேன் போனதும் வந்ததும் தேகமேயன்றி அசல பரிபூரண ஆன்மாவாம் நானல்ல. நாடுங்கால் எனக்குப் போக்குமில்லை வரவுமில்லை. நான் சர்வதிருசியங்கட்கும் காரணமாகிய மாயையின்-நிலையற்ற மாறுதலடைகின்ற குணங்களில் முன்பு தோய்ந்தவனுமல்ல; இனித் தோயப்போபவனுமல்ல.

### 3. துவித பாவனையால் உண்டாகும் குற்றம்.

சிவமாய் நின்று சிவனை உபாசிப்பவனே சிவோகம் பாவனை செய்பவனாவான். சிவோகம் பாவனை செய்பவன், "சிவதத்துவம் முதல் மண் தத்துவம் ஈறாகவுள்ள அனைத்தும் என்றும் உள்ளன. அவை காரணரூபமாய் ஒடுங்கியும் காரிய ரூபமாய்ப் பலவகையான உலகங்களின் கூட்டமாக விரிந்தும் காணப்படுவன, அவை அனைத்தும் என்னிடத்திருப்பன. உயிர்ப்பொருள் உயிரில் பொருளாகிய அனைத்தும் என்னை ஆதாரமாகக் கொண்டு நின்று தொழிற்படுவன. காணப்படுவனவும் கேட்கப்படுவனவும் ஆகிய எல்லாப் பொருள்களும் அவற்றின் உள்ளும் புறம்பும் என்னால் வியாபிக்கப்பட்டன" என்று பாவனை செய்யவேண்டும்.

உயிரும் சிவமும் கலப்பினால் பிரிப்பின்றி ஒன்றாய் நிற்கும். உயிர், உடலோடு பிரிப்பின்றி நின்றே அவ்வுடலை உணர்வது போல சிவனோடு பிரிப்பின்றி நின்றே சிவனை உணரும். ஆதலால் பிரிப்பின்றி நின்று தன்னோடு பிரிப்பின்றி நிற்கப்படும் பொருளைப் பாவிப்பதற்கு ஒன்றாய் நிற்கும் உயிரும் உடலும் உவமையாகும். உயிரும் சிவமும் எக்காலத்தும் பிரிப்பின்றி நிற்பினும் காணுந் தன்மை காட்டுந் தன்மையாகிய பொருட்டன்மை பற்றி, வேறு வேறாய் நிற்குங் கண்ணும் விளக்கும் அவற்றிற்கு ஒரு புடை உவமையாகும்.

கண்ணொளியானது விளக்கொளியோடு கலந்து நின்று கொண்டே விளக்கொளியை இது விளக்கொளி என்று காணும். அவ்வாறே உயிரின் அறிவும் சிவனருளோடு கலந்து நின்றே சிவனை உபாசித்தல் கூடும். கண்ணொளி விளக்கொளியோடு கலந்து நிற்கும் காலத்து இது கண்ணொளி இது விளக்கொளி எனப் பிரித்தறிய வாராது. வாராவிடினும், காணுந்தன்மை பற்றிக் கண்ணொளியும் காட்டுந் தன்மை பற்றி விளக்கொளியும் உண்டென்பது கொள்ளப்படும். அது போலவே உயிரறிவு சிவனருளோடு கலந்து நிற்குங் காலத்து இது உயிரறிவு இது சிவனறிவு எனப் பிரித்தறிய வாராது. வாராவிடினும், பற்றி நின்று உபாசிக்குந் தன்மை பற்றி உயிரின் அறிவும், பற்றுதலைச் செய்வித்துப் பற்றுக்கோடாய் நிற்றல் பற்றிச் சிவன் அருளும் உண்டென்பது கொள்ளப்படும்.

கண்ணொளி விளக்கொளியோடு கலந்து நின்று விளக்கொளியை இது விளக்கொளியெனக் காணும் அளவும், வேறாய் நிற்றல் பற்றிப் பிறபொருளையுங் காணுந்தன்மை கண்ணுக்கு உளதாகும். அவ்வாறே உயிரின் அறிவு சிவனருளோடு கலந்து நின்று சிவனை உபாசிக்கும் அளவும் வேறாய் நிற்றல் பற்றி உலகப் பொருள்களையும் அறியுந் தன்மை உயிருக்கு உண்டு. கண்ணொளி விளக்கொளியின் வேறாய் நிற்கும் அளவும் பிறபொருள்களைப் பற்றுமாறு போல உயிரின் அறிவு சிவனருளின் வேறாய் நிற்கும் அளவும் உடலைப்பற்றி நின்று பிறந்து இறந்து உழலும்.

பாவிப்பவன், பாவனை செய்கின்ற நான் சீவன் என்றும், என்னாற் பாவிக்கப்படும் சிவம் என்னிலும் வேறென்றும் துவிதபாவனை செய்வானாயின் துவிதபாவனையுள்ள மட்டும் தன்னோடு பிரிப்பின்றி நிற்குஞ் சிவத்தின் தன்மையறிந்து சிவமாய் விளங்கும் பாக்கியத்தைப் பெறமாட்டான்.

கண்ணொளி விளக்கொளியில் அழுந்துங் காலத்து விளக்கொளியெனக் கண்ணொளியென வேறுபிரித்தறிய வாராது விளக்கொளியாகவே விளங்கும். அதுபோலவே உயிரின் அறிவு சிவனருளில் அழுத்துங் காலத்துச் சிவம் எனத் தாமென வேறு பிரித்தறிய வாராது சிவமாகவே விளங்கும். கண்ணொளி விளக்கொளியில் அழுந்துவதற்குத் பிறபொருள்களைக் காணாது விளக்கொளியாய் அவ்விளக்கொளியினைக் காணுதலையே செய்ய வேண்டும். அவ்விதமே உயிரின் அறிவு சிவனருளில் அழுந்துவதற்கு உலகப் பொருள்களை அறியாது சிவனருளால் அவ்வருளையே நாடுதலாகிய உபாசனையைச் செய்ய வேண்டும்.

4. **துவிதபாவனையைக் கைவிட்டு அத்துவித பாவனையால் சிவம் நான் என்று பாவிப்பவனுக்கு முற்றுணர்வுத் தன்மை விளங்குதல்.**

சிவன், சீவன், மலம் ஆகிய இம் மூன்றும் அநாதியானவை. சிவனும், சீவனும் பொருட்டன்மையால் இரண்டேயாயினும், வேறுவேறு பொருட்களாக பிரித்தறிய வராத கலப்பினை



உடையன. இப்பொருள்கள் அநாதியாதல் போல இவற்றின் கலப்பும் அநாதியாகும். ஆன்மா மலத்தைப் பற்றுதலும் அநாதியாகும்.

அநாதி இரு வகைப்படும். ஒன்று நீங்கும் செயற்கை அநாதி, மற்றையது நீங்காத இயற்கை அநாதி. ஆன்மா மலத்தைப் பற்றி நிற்றல் நீங்கும் அநாதி, சிவத்தடன் பிரிப்பின்றி நிற்றல் நீங்காத அநாதி. நெல்லினிடத்து உமியும், செம்பினிடத்துக் களிம்பும் அநாதியே ஆயினும் பிரிக்கப்படும். இது போலவே ஆன்மா மலத்தை அநாதியே பற்றி நிற்பினும் நீங்கும். மணியினிடத்து ஒளியும், தீயினிடத்துச் சூடும் அநாதியேயாய் பிரிக்கப்படாதவாறு போல ஆன்மா சிவத்துடன் பிரிப்பின்றி நிற்கும். ஒளியும் சூடும் குணமாதல் போல ஆன்மா சிவத்தின் குணமன்று. ஆயினும் மணியையின்றி ஒளியும், தீயையின்றிச் சூடும் தனித்து நில்லாதவாறு போல, சிவனை இன்றி ஆன்மா தனித்து நில்லாமைக்கு மட்டுமே உவமையாகும். குணமுங் குணியும் போல குணிப்பொருள்களாகிய ஆகாயமும் காற்றும் பிரிக்க முடியாதவாறு கலந்து நிற்கும். அவ்வாறே குணிப்பொருள்களாகிய சிவமும் ஆன்மாவும் கலந்து நிற்கும்.

பற்றுந்தன்மை ஆன்மாவின் குணமாகும். சிவமும் மலமும் ஆன்மாவாற் பற்றப்படும் பொருள்களாகும். சிவமும் மலமும் அநாதியே ஆன்மாவோடு கலந்துள்ளன. சிவம் சித்து என்னுஞ் சாதி ஒப்புமையால், ஆன்மாவிற் கலந்து நிற்கும். இக் கலப்பு சுசாதிக் கலப்பு ஆதலால் நீங்காது. மலம் சடம் என்னும் சாதிவேற்றுமையால் ஆன்மாவின் அறிவிலே கலந்து நிற்கும். இக் கலப்பு வேற்றுச் சாதிக் கலப்பு ஆதலால் நீங்கும். சிவம் ஆன்மாவிலே கலந்து நிற்றல் உள்ளே நிகழும். ஆன்மாவின் அறிவிற் கலந்து நிற்றல் புறத்தே நிகழ்தலாலும், பற்றுதற்றொழில் புறத்து நிகழ்தல் இயல்பாதலாலும் ஆன்மா மலத்தைப் புறத்தே பற்றி நிற்கும். மல மறைப்பினால் ஆன்மா தன்னோடு கலந்துள்ள சிவத்தை அறியாமல் அம்மலத்தில் அழுந்தி நின்று வருந்தும்.

உள்ளிடாய் விளங்குஞ் சிவம் ஆன்மாவின் துன்பத்திற் கிரங்கி, கலையாதி தத்துவங்களைக் கூட்டும். அவற்றால் விளங்கித் தோன்றும் ஏகதேச அறிவு கொண்டு, மல சத்தியைத் தேயச் செய்யும். மலச்சத்தி தேய்ந்து மலபரிபாகமான காலத்து சிவம் குருவடிவந் தாங்கி வரும். குருவாக வந்து உள்ளே விளங்குந் தன்னை நோக்கும் உபாயமாகிய அத்துவித பாவனையை அறிவிக்கும்.

பாவனை பொய்ப்பாவனை என்றும், மெய்ப்பாவனை என்றும் இரண்டு வகைப்படும். பாவனைக்கு எய்தாத பொருளை எய்தியதாக வைத்துப்பாவிக்கும் பாவனை பொய்ப்பாவனையாகும்; இது பசித்தவன் உண்டது போலப் பாவித்தலை ஒக்கும். எய்தும் பொருளை எய்தியதாக வைத்துப் பாவிக்கும் பாவனை மெய்ப்பாவனையாகும்; இது மறந்தவன் மறக்கப்பட்ட பொருள் நினைவிலே தோன்றுதற் பொருட்டு அப் பொருளைப் பற்றிச் சிந்தித்தலை ஒக்கும்.

சிவப்பொருள் என்றும் தன்னோடு பிரிப்பின்றி நிற்கவும் வேறென்று காண்பது விபரீதக் காட்சி; உயிர்ப் பொருளாகிய தான் சிவப்பொருளையின்றித் தனித்து நில்லாதிருக்கவும், தனித்து வேறாக நிற்பதாகக் காண்பது வேற்றுமைக் காட்சி. சிவப்பொருளே நான், நானே அச்சிவப் பொருள் என அபேதமாகப் பாவிக்கும் மெய்ப்பாவனை விபரீதமாகவும் வேற்றுமையாகவும் காண்பதனை விட்டு, எங்கும் வியாபகமாயும் வியாபிக்கப்படும் பொருள்களாகிய அவ்வான்மாக்கள் அனைத்துமாயும் விளங்குஞ் சிவசொரூபத்தைச் சந்தேகமறக் காண்பிக்கும். அத்துவித பாவனையால் சிவமே நான் என்று உபாசிப்பவன், கருவிகளோடு கூடிநின்று ஒன்றினை அறியுங்கால் பிறிதொன்றனை அறியாது நின்ற ஏகதேச அறிவாகிய சிற்றறிவினின்றும் நீங்கிச், சிவனுக்குரிய முற்றறியும் தன்மை விளங்கப் பெறுவன்.

பிறிதொன்றனை அறிய வேண்டுவதின்றாய்ச் சிவம் ஒன்றனையே அறிந்து நிற்கும் சிவஞானியின் அறிவில், சிவத்தின் முற்றறிவுத் தன்மை விளங்கித்தோன்றும். தோன்றினும் சிவம்



ஒன்றினையே அறிதல் அன்றிச் சிவத்தின் முற்றறிவால் அறியப்படும் பொருளை அறியாமையின், சிவத்தின் அறிவை நோக்க அந்த நிலையிலும் ஆன்ம அறிவு சிற்றறிவேயாம்.

### 5. அத்துவித பாவனையால் சிவமே தானாக அறியாதவன் பிறந்து இறந்து உழலுதல்

சிவன் வேத சிவாகமங்களால், "தனக்கு ஒப்பாரும் மிக்காரும் இல்லாதவர்; தன்னருளாலே தத்தம் புவனங்களுக்குத் தெய்வங்களாகும் பிரமா, விட்ணு முதலிய தேவர்போலன்றித் தாமே சுதந்தரராய் புவனமனைத்திற்குந் தெய்வமாகும் மகாதேவர்; ஏனைய தெய்வங்கள் போலப் பிறப்பும் இறப்பும் இல்லாதவர்" எனப் பாராட்டப்படுகின்றார். அவர் ஞானத் திருமேனியன்றி மாயா சரீரம் இல்லாதவர்; ஞானக்குணங்களன்றி சாத்துவிகம் இராசதம் தாமதம் ஆகிய மாயையின் குணங்கள் இல்லாதவர்.

அத்தகைய சிவம் ஆன்மாவுடன் என்றும் பிரிப்பின்றி அத்துவிதமாய் நிற்கின்றது. அச்சிவமே நான் என்று அத்துவித பாவனையால் ஐயமற அறியாதவன் மலத்துட்பட்ட பசுவாம். இவனதுமலம் நீங்குதற் பொருட்டே பதி ஐந்தொழில் புரிகின்றார். ஐந்தொழிலால் மலம் தேய்ந்து மலபரிபாகம் அடைதற் பொருட்டு இவன் பிறந்து இறந்து உழலுவான்.

சார்ந்ததன் வண்ணமாய் நின்று அறிதலே ஆன்மாவின் இயல்பு. ஆன்மாவாற் சாரப்படும் பொருள்கள் சிவமும் மலமும் ஆகும். சிவமும் மலமும் அநாதியானவை. ஆயினும் மலம் நீங்கும் அநாதி; சிவம் நீங்காத அநாதி. அங்ஙனம் நீங்காதிருக்குஞ் சம்பந்த விசேடத்தால் சிவமே நான் என்று பாவிக்கும் ஆன்மா சிவமாதல் கூடும்.

சிவமே நான் என்று உணர்ந்தவன் இயல்பாகவே பாசங்களினின்று நீங்கிச் சுத்தனாயும் நித்தனாயும் விளங்கும் சிவனேயாவன். இதிற் சந்தேகமில்லை. சிவமாந் தன்மைப்

பெருவாழ்வடைந்த அந்த நிலையிலும் நான் என்னும் தற்போதம் சிறிதும் முனைத்துத் தோன்றாமல் தன்னைச் சிவத்துள் விழுங்கக் கொடுத்து சிவ போதத்துள் அழுந்தி நிற்பவன் எவனோ அவனே உண்மை யுணர்ந்த மெய்ஞ்ஞானியாவன்.

அத்துவிதமாவது, பொருள்கள் இரண்டிருந்தும் இரண்டாகப் பிளவுபடப் பிரித்தறிய வாராமலும், அங்ஙனம் பிரித்தறிய வாராமையால் இரு பொருள் இல்லை என்று சொல்ல முடியாமலும் உள்ள நிலையில் ஒன்று என்றாவது, இரண்டு என்றாவது வரையறுத்தற்கு முடியாமையாம்.

### 6. *சிவாநுபவத்தின் பொருட்டு தன்னையும் தலைவனையும் எப்பொழுதும் பழகி அறியும் நெறி.*

சிவபெருமானுடையநிலை, பரம் அபரம் என இருவகைப்படும். அவற்றுள் பரம் செயற்கையால் உண்டாகின்ற சகல உபாதிகளும் நீங்கிய சச்சிதானந்த மயமாகிய சொரூபம்; அது சூக்குமமாகும். அபரம் படைப்பாதி ஐந்தொழிலையும் எப்பொழுதும் மேற்கொள்ளும் தடத்த வடிவம்; அது தூலவடிவமாகும்.

சிவத்தின் அபர பர நிலைகளை வழிபட்டுப் பழகும் உயிர்களும் தூலம் என்றும், சூக்குமம் என்றும் இருவகைப்படும். சிவத்தின் தடத்தநிலையாகிய அபரம் தூலம்; ஆதலின் தூல நிலையினையுடைய உயிருக்கு அது அனுபவம் ஆகும்; சொரூபநிலையாகிய பரம் சூக்குமம்; ஆதலின் சூக்கும நிலையினையுடைய உயிருக்கு அது அனுபவம் ஆகும்.

உயிரின் விருத்தி புறத்து நிகழ்தலும், அகத்து நிகழ்தலும் என இருவகைப்படும். உயிர் விருத்தி புறத்துநிகழுங்கால் விடயங்களிற் பற்றுவைத்து அவற்றில் அழுந்தியுழலலாகாது. சிவபெருமான் திருமேனி கொண்டு எழுந்தருளி இருக்குந் திருக்கோயில்களிற் சென்று தடத்தத் திருமேனியிற் பற்று வைத்து அத்திருமேனியை வழிபடும் மந்திரமயமாய் நின்று, வழிபட்டு வர வேண்டும்; இவ் வழிபாட்டுப் பயிற்சி முற்றுதலால் விடயப்



பற்று அறும்; பற்றற்றதனால் உயிர் விருத்தி புறத்துச் செல்லாது; மடங்கி அகத்து நிகழும். உயிர் விருத்தி அகத்து நிகழுங்கால் சிவபெருமானுடைய சொரூபத் திருமேனியிற் பற்று உண்டாகும். அத்திருமேனியை அறிதற்குரிய சிவஞானத்தைச் சிவகுருவாற் பெற்று, அச்சிவஞான மயமாய் நின்று சிவனைக் காண வேண்டும்.

இவ்வாறு புறத்தே சிவத்தின் தடத்த நிலையை மந்திரத்தாலும், அகத்தே சொரூபநிலையை ஞானத்தாலும் இடையறாது பழகிவரின் "சிவமே நான்" என்னும் அத்துவித நிலை சித்திக்கும். இவ்விடத்துத் திரும்ப திரும்ப விகற்பத்திற்கு ஏதுவாகிய வார்த்தைகளை விரித்துப் பலவாகச் சொன்னால் அவை மனத்திற்கு அதிக மயக்கத்தை உண்டாக்கும்.

### 7. *சார்ந்ததன் வண்ணமாந் தன்மையால் எல்லாப் பொருள்களின் தன்மைகளும் ஆன்மாவுக்கு உளவாதல்.*

வார்த்தைகளை விகற்பித்துச் சொல்லுதல் மயகத்திற்குக் காரணமாகும்; ஆதலால் சுருக்கிக் கூறுகின்றேன்; கேட்பாயாக:-

சார்ந்ததன் வண்ணமாய் வியாபித்து நின்று அறியுந்தன்மை ஆன்மாவின் சிறப்பியல்பாகும். மலத்தைச் சார்ந்து மலமாயும், மலத்தினின்றும் நீங்கிய விடத்துச் சிவத்தைச் சார்ந்து சிவமாயும் நிற்றற்கு உரிமைபற்றி ஆன்மா சதசத்து எனப்படும். மலத்தைச் சார்ந்து அதுவாய் நிற்றல் அநாதி செயற்கை; பொது எனப்படும். சிவத்தைச் சார்ந்து அதுவாய் நிற்றல் அநாதி இயற்கை; சிறப்பு எனப்படும். சார்ந்ததன் வண்ணமாகும் ஆன்மாவின் இயல்பையும், சிவமாய் நிற்கும் ஆன்மாவின் சொரூப நிலையையும் சிறப்பு என்ற சொல்லால் கூறுதல் வழக்கு. அன்றியும் பொருளுக்கு, பொருண்மைச் சாதி உடைமையாதலும், குணமுடைமையாதலும் இலக்கணமாகும். சார்ந்ததன் வண்ணமாதல் ஆன்மாவுக்குப் பொருண்மைச் சாதி எனவும், சிவமாய் நிற்றல் குணம் எனவும் உணர்ந்து கொள்க. குணம்-சிறப்பியல்பு.

பிரமா விட்டுணு முதலிய தேவர்களுக்கெல்லாம் முதற் கடவுளாகிய சிவம், எல்லாப் பொருள்களுடனும் வியாபித்திருக்கும்; எவற்றுக்கும் முற்பட்டும் இருக்கும்; உலகப்பொருள்கள் வியாப்பியமாய்ச் சிவத்தின் உட்பட்டு விளங்கும்.

சீவன் எல்லாப் பொருள்களினும் முற்பட்டு விளங்கும் சிவரூபமாகத் தன்னைப் பாவிப்பின், சிவத்தின் தன்மையாய் விளங்குவன்; சிவவியாபகத்தினுட்பட்டு விளங்கும் உலகப் பொருள்களாகத் தன்னைப் பாவிக்கின் அவ்வப் பொருள்களின் தன்மையாய் விளங்குவன். ஆதலால் உட்பட்டு விளங்கும் உலகப் பொருள்களைப்பாவியாது, முற்பட்டு விளங்கும் சிவரூபத்தைப் பாவிக்க வேண்டும். உலகப் பொருள்களை அறியும் அறிவே பொதுவாக அறிவு எனப்படும். சிவனை அறியும் அறிவு சிறப்பாகப் பேரறிவு - விஞ்ஞானம் எனப்படும். சிவத்தை அறிந்து சிவமாய் நிற்றலே ஆன்மாவின் சொரூபநிலை - சிறப்பியல்பு; ஆதலினால் அது ஆன்மஞானம் எனப்படும். சிவமாய் நின்று சிவனை உணரும் சிவஞானமே உணரும் உரிமைபற்றி ஆன்மஞானம் என்ற பெயரால் அழைக்கப்படும். இந்தப்பிரகாரம் ஆன்ம ஞானத்தைச் சுருக்கி உரைத்தோம்.

சிவம் அநாதியே பிரிப்பின்றி நிற்றலால் சிவத்தின் தன்மை அநாதியே ஆன்மாவிற்கு உரியது. அதுவே ஆன்மாவிற்கு சொரூபம். ஆயினும், மலத்தால் தடைப்பட்டு அது விளங்கா திருக்கும். அதனை ஆன்மஞானத்தால் அறிந்து மலத்திலிருந்து நீங்கியவிடத்துத், தன்னோடு பிரிப்பின்றி நிற்கும் சிவத்தின் தன்மை விளங்கித் தோன்ற அதுவாய் நிற்கும். முத்தியடைந்த ஆன்மா, சிவத்தின் குணங்கள் தன்மாட்டு விளங்கித் தோன்ற சிவாநுபவம் ஒன்றையே துய்க்கும்.

சிவனோடு பிரிப்பின்றி நிற்கும் உயிர்களை மறைக்கும் மலத்தின் சத்தி, சிவனை மறையாதவாறு போல, சிவமேயாய் நிற்கும் முத்தான்மாக்களை மறையாமையின் மலசத்தி அழிந்திடும்.



மலம், சிவத்தினுள் வியாப்பியமாய் இருந்தும் சிவனை உணராத உயிர்களை மறைத்து நிற்றலின், அதன் நித்தியத் தன்மை அழிந்திடாது. முத்தியில் மலம் அறவே நீங்கும்; நீங்கினும் ஏனையப் பெத்தரிடத்து இருத்தலால் மலத்தின் நித்தியத்திற்கு இழுக்கில்லை. முத்தியில் மலமின்மையால் பேரின்பம் விளையும்.

மலநீக்கம் காரணமாகச் சிவத்தின் தன்மை விளங்கித் தோன்ற அதனை அறிந்து ஆன்மாவைக் காண்பவன் எவனோ அவனே ஆன்ம ஞானம் என்னும் புணையின் துணைகொண்டு மலத்தாலாகிய பிறவிப் பெருங்கடலை நீக்கியவனாவான்.

உபநிடதம் ஓதுதல், வேள்வி - திருவிழாச் செய்தல், தெய்வ வழிபாடுசெய்தல் ஆகிய இவை எல்லாம் ஆன்ம ஞானம் விளங்குவதற்குச் சாதனங்களாகும். பிறவிப் பெருங்கடலைக் கடப்பதற்கு ஆன்ம ஞானம் நேரே சாதனமாகுமன்றி உபநிடதம் ஓதுதல் முதலியன நேர்ச்சாதனமாகா. அவற்றால் ஆன்ம ஞானத்தைப் பெற்றலல்லது பிறவிப்பெருங்கடலைக் கடத்தல் இயலாது.

ஆன்ம ஞானம் வேறு. "நான் பிரமம்" என்னும் பசுஞானம் வேறு. மலம் நீக்கிய விடத்துத் தன்னோடு பிரிப்பின்றி நிற்கும் சிவம் விளங்கித் தோன்றுதலால், அச்சிவமாய் நிற்றல் சிவஞானம் எனப்படும் ஆன்மஞானமாகும். கருவிகள் நீங்கியவிடத்து "நானே பிரமம்" என நிற்றல் பசுஞானம். கர்த்தாவைச் சார்ந்து கருத்தாவாய் நிற்றல் ஆன்ம ஞானம்; தானே கருத்தாவாய் நிற்றல் பசுஞானம். மலம் நீங்குதலை ஆன்ம ஞானம் என்றும், மாயாகாரியம் நீங்குதலை பசுஞானம் என்றும் சுருக்கிக் கூறலாம்.

## 8. ஆன்மஞானமே சிறந்தது, அதுவே சிந்திக்கற்பாலது

ஆன்மாவே பரமசிவமென உண்மையனுபவத்தில் உணர்கின்ற அனுபவ அறிவுடையவன், சாக்கிரம் முதலிய எந்த நிலையை அடையினும் அந்த நிலையைப் பற்றான்; இத்தகைய

ஆன்மாவே பரமுத்தியை இலகுவாக அடையும்; ஆன்மா பெறும் பேறுகள் பலவற்றுள்ளும் இதுவே சிறந்த பேறாகும். இந்த ஆன்மலாபத்திற்கு ஒப்பான இலாபம் வேறொன்றும் இல்லை. இந்த ஆன்மாவே தியானயோகங்களுடன் கூடிய கரணங்களுக்கு எட்டாததாயும், பாசஞான பசுஞானங்களுக்கு எட்டாததாயும் விளங்கும் முற்றறிவுடைய பரிபூரணனாகும்; இந்த ஆன்மாவே பரமசிவ சொரூபமாகும்.

உலகப் பொருள்களை வேறுவேறாகக் காணின் விகற்ப உணர்வு உண்டாகும்; எல்லாம் சிவமேயாய்க் காணினும் அப்பொழுதும் காணப்படும் சிவம் ஒன்று, காணும் நான் ஒன்று என விகற்ப உணர்வே மேம்படும். ஆதலால், அவன் என்றும் நான் என்றும் பேதபாவனையின்றித் தான் சிவமாகவே நிற்கவேண்டும். அங்ஙனம் நிற்பவனுக்கு ஒவ்வொரு சமயத்தில் விருத்தி புறத்துவரின் அப்பொழுதும் சிவமாய் நிற்கும் ஒற்றுமை பற்றி, "சிவமும் நான், சிவனால் வியாபிக்கப்பட்ட பொருளும் நானே" என அந்த ஆன்ம சொரூபத்தையே சிந்திக்க வேண்டும்.

தன்னைச் சிந்திக்கும் அகநோக்கு உள்ளவர்களுக்குப் புறத்து விடயம் தாக்காது. சிவமாய் நிற்கும் ஒற்றுமை பற்றிச் சிவனுக்குரிய தன்மையனைத்தையுந் தம்பாலேற்றித் தன்னையே சிவமாகச் சிந்திக்க வேண்டும்.

தன் ஆன்மாவை உள் என்றும், புறம்பு என்றும், தூரம் என்றும், சமீபம் என்றும் இல்லாததாய்ச் சிந்திக்க வேண்டும். கலையாதி வடிவமில்லாத நிட்களமாயும், நிறைந்த சொயம் பிரகாசமாயும், பிரமமாயும் எண்ணவேண்டும்; பொருந்துகின்ற குறுக்கும், மேலும், கீழும், உள்ளும், புறம்பும் ஆகிய எவ்விடத்தும் சமமாய் வெறும் பாழ்போலுள்ள சிவசொரூபமாயுங் கருதவேண்டும்; சொல்லப்பட்ட சூனியம், சூனியமில்லாமை என்னும் இரண்டு தொடர்பில் அமைத்துக் கொள்ளும் தன்மையில்லாததாயும், தனக்கு ஓர் ஆதாரமில்லாததாயும், துன்பமில்லாததாயும் நினைக்க வேண்டும். மாயையின் காரியமாய் நிகழும் குணங்களுக்கு எட்டாததாயும்,நாமம், உருவம் இல்லாததாயும், மலமில்லாததாயுஞ் சிந்திக்க வேண்டும்.



### 9. ஆன்மஞானத்தைப் பெற்ற ஞானி *சிவனையே சிந்தித்துக்* கொண்டிருத்தல்.

மேலான தவம், மந்திரத்தைக் கணித்தலாகிய செபம், மூர்த்தியைப் பாவித்தலாகிய தியானம், தீர்த்தமாடல் ஆகியவை தெய்வ உபாசனையின் பாற்படுவன. இவ்வுபாசனைக்கு வருணத்திற்கும் நிலைக்கும் ஏற்றவாறு காலம், செய்யுமுறை, சாதி, நல்லாரிணக்கம் என்பன கூறப்பட்டுள்ளன. உபாசனைக்குக் கூறப்பட்ட இவையெல்லாம் சிவஞானத்தைப் பெறுவதற்குரிய ஞானசாதனங்களாகும். பெருமைவாய்ந்த சிவஞானங்கைவரப் பெற்றவராகிய சிவஞானி, ஞானசாதனங்களாகிய இவற்றைக் கைவிட்டுவிடுவார்.

சொயம் பிரகாசமாய் விளங்கும் சிவனிடத்திற் சிந்தனையை நிறுத்தி, அங்ஙனம் நிற்கின்றோமென்ற அறிவும் அற்று, தான் என்றும் அவன் என்றும் கருதுகின்ற பேதபாவனையில்லாதவராய் இருப்பார். பிராரத்தங்காரணமாக விடயங்கள் தோன்றவரினும் அவற்றிலே ஆசையில்லாதவராய் இருப்பார்; பேதம், அபேதம், பேதாபேதம் என்னும் மூன்று பாவனைக்கும் எட்டாது அப்பாற்பட்டிருப்பார்; சிவனருளாலே சிவனிடத்தில் இடையறாது நின்று தன்னைச் சிவமாகச் சிந்திப்பார்.

### 10. *சிவஞானியின் சுவாநுபூதி நிலை*

சிவஞானி, சிவஞானத்தாலே தன்சித்தமானது தன்னின் வேறான ஒரு பொருளையும் அறியாமல், (சிந்தனை செய்தலும் சிந்தனை செய்யாதிருத்தலும் ஆகிய அவ்விரண்டும் இல்லாது) அசைவற்று நின்று, தத்துவங்களுக்கெலாம் எட்டாததாகிய நிட்கள சொரூபமான தன்னுடைய சொரூபத்தை அறிந்தால் எந்தச் சுகமுண்டோ அந்தச்சுகமே நித்தியமாயும், நிருவிகற்பமாயும், சிந்தித்தற்கு அரியதாயும், நிரதியச ஆனந்தமாயும் விளங்குகின்ற சிவானந்தமெனப்படும் மேலான சுகமாம்.

இறைவனுடைய தடத்தநிலை மூன்றுக்கும் அப்பாற்பட்ட (சொரூப நிலைய) தாகிய தூரிய சுகமானது அநுமானப் பிரமாணத்தால் அறிதற்குரிய ஏது, திருட்டாந்தம் இல்லாததாயும், ஆதியந்தம் இல்லாததாயும் உள்ள முத்திச்சுகமாம்.

### 11. சிவஞானிக்குச் சமய நியமங்களின் சங்கற்பம் இல்லாமை.

மனம் எப்பொழுதும் ஏதேனும் ஒன்றைப் பற்றிக்கொண்டே நிற்கும். ஒன்றையும் பற்றாது தனித்து ஒருபொழுதும் நில்லாது. புறத்தே விடயங்களிற் பற்றுச் செய்து நிற்கும் பொழுது, பொருந்துகின்ற விடயக் கூட்டங்காரணமாக மனத்தின்கண் சங்கற்ப விகற்பங்கள் நிகழும். சங்கற்ப விகற்பங்களை அறவே யொழிக்கவேண்டுமானால், புறவிடயங்களிற் பற்றுச் செய்து நிற்கும் மனத்தை அவற்றினின்றும்மீட்டு, அகத்துப் பிராசாத நெறியாகிய யோகத்திற் பற்றுச் செய்து பயில வேண்டும். அவ்வாறு பயின்றுவர கோடி சூரியப்பிரகாசம் என்னும்படியாக மனாதீதமான திருவருட்சத்தியானது பிரமரந்திரத்தில் விளங்கித் தோன்றும். அப்பொழுது உண்டாகும் சுகம், புறத்தேயுள்ள விடயசுகங்களைப் பார்க்கிலும் மிகமிக மேலானதாகும்.

அங்ஙனம் திருவருட் சக்தி அறிவின்கண் விளங்கித்தோன்றும் அந்த நிலையும் காண்பான், காட்சி, காட்சிப்பொருள் என்னும் மூன்றாய தன்மையுள்ள பேதமான நிலையாகும். திருவருள் விளக்கம் நிலைக்கப்பெற்று அப்பேதமும் அறவேண்டும். பின்னா் திருவருளென தானெனப் பேதமின்றி அவ்வருளை தானாகப் பிரிப்பின்றி ஒற்றுமைப்பட்டு நிற்க வேண்டும். திருவருளோடு தான்பிரிப்பின்றி நின்ற அந்தநிலையில் விளங்கித் தோன்றும் சுகமே தனக்குமேற்பட்ட தொன்றில்லாத, நிலைபேறுடைய ஆனந்தமாகும்.

சரியை, கிரியை, யோகங்கள் சிவஞானம் பெறுவதற்கான சாதனங்களாகும். சிவஞானம் பெறுவதற்குச் சிவயோகம்



அருட்டிப்பவருக்கு, "இன்ன தேசத்து இன்ன காலத்தில் இன்ன திக்கு நோக்கி இவ்வாறு இருந்து இன்ன இன்ன சாதனங்கள் பயிலவேண்டும்" என்ற நியமங்கள் வேண்டப்படுவன.

சிவஞானம் கைவரப்பெற்ற சிவஞானிக்கு, சரியை கிரியை யோக அநுட்டானங்களும், சமயாசாரங்களும், பொருந்துகின்ற வருணாச்சிரம தருமங்களும் தேசகால திக்குகளும் வேண்டப்படுவனவல்ல. சிவஞானிக்கு அந்த ஞான அநுபவத்தில் அழுந்துவதிலேயே ஆன்மவிருத்தி நிகழும். ஏனைச் சரியையாதியவை உறங்கினவன் கைப்பொருள்போல் நெகிழும்.

"ஞாலமதின் ஞானநிட்டை யுடையோருக்கு
நன்மையொடு தீமையில்லை நாடுவதொன்றில்லை
சீலமிலை தவமில்லை விரதமொ டாச்சிரமச்
செயலில்லை தியானமிலை சித்தமலமில்லை
கோலமிலை புலனில்லை கரணமில்லை
குணமில்லை குறியில்லை குலமுமில்லை
பாலருடன் உன்மத்தர் பிசாசர்குண மருவிப்
பாடலினோடு ஆடலிவை பயின்றிடினும் பயில்வர்"
- சித்தியார்

### 12. சிவஞானி சித்தத்தைச் சிவனிடத்தே வைத்து அடங்கியிருத்தல்

பசுவின்பால் கலப்பினால் அதன் இரத்தத்தோடு ஒன்றாயும், தன்மையினால் இரத்தத்துள் அடங்காமல் வேறாயுமிருக்கும். (தன்மையினால் வேறாயிருத்தலை பால் இரத்தம் என்பவற்றின் நிறங்களில் வைத்து அறியப்படும்) இவ்வாறே சிவஞானமும் உயிர்களின் அறிவினிடத்து கலப்பினால் ஒன்றாயும் தன்மையினால் வேறாயுமிருக்கும்.

பசுவின் இரத்தம், அதன் உடற்கூற்றுள் ஒன்றாய் அப்பசுதனக்கு உபகாரமாயிருப்பது. பால், உடற்கூற்றுள் ஒன்றல்லாததாய் தன்கன்றுக்கு உபகாரமாயிருப்பது. அதுபோல

எல்லா ஆன்மாக்களின் ஞானமும் அறிவுமயமாயிருப்பினும் அவ்வறிவு ஆன்மாவாகிய தனக்கு உபகாரமாயிருக்கும். ஆன்மாவிடத்து விளங்கித்தோன்றும் சிவஞானம், எவ்வுயிர்க்கும் உபகாரமாய் கருணை வடிவாயிருக்கும். பசுவின் பாலினால் கன்று திருப்தி அடைவதைக்கண்டு பசு, தானும் திருப்தியடைவது போல ஆன்மாவினிடத்து விளங்கும் சிவஞானத்தால் பிற ஆன்மாக்களும் தாமும் திருப்தியடையும்.

பால் பசுவின் உடல் முழுவதும் விரவியிருப்பினும் முலைக்காம்பின் வழியாக வெளிப்பட்டுத் தோன்றும். அதுபோலவே சிவஞானமும் எல்லா ஆன்மாக்களிடத்தும் விரவியிருப்பினும் சிவஞானிகளிடத்து விளங்கித் தோன்றும்.

பசுக்களின் சரீரநிறம் செம்மை, வெண்மை, முதலிய பல பேதமாயிருப்பினும் அந்த பசுக்களின் இடத்து உண்டாகும் பால் வெண்மையாகிய ஒரு நிறமாய் இருப்பதுபோல சரீர தர்மமான அந்தணர் முதலிய சாதிகளும் பிரமச்சரியம் முதலிய நிலைகளும் பலவாயிருப்பினும் சரீரியாகிய ஆன்மாவிடத்து விளங்கித்தோன்றும் சிவஞானத்தின் தன்மை ஞானாகாசமான ஒரு தன்மையாயிருக்கும்.

சிவம் சத்தனும், ஞானம் சத்தியும் ஆதலால், சத்தி சத்தனிற் பிரிப்பின்றி நிற்கும். எவ்விடத்தும் வியாபிக்குஞ் சத்திக்குரிய வியாபகத் தன்மை சத்தனுக்கும் உண்டு. நேரே வியாபிக்கும் தன்மையுள்ள சக்தி குணமாதலின் உயிரால் பற்றப்படுவதற்குப் புலனாகாது. உயிராற் பற்றப்படுவதற்குப் புலனாவது குணியாகிய சிவமே. சூரியனும் அதன் ஒளியும் போன்றே சிவனும் அதன் சத்தியும் உள்ளன. சூரிய ஒளி வியாபிக்குமாறு போல சிவசத்தி வியாபிக்கும். சூரியவொளி சூரியனையின்றித் தனித்து நில்லாதவாறு போல சிவசத்தி சிவனையன்றித் தனித்து நில்லாது. கண்ணாற் பற்றப்படுவதற்குப் புலனாவது சூரியனேயாமாறுபோல உயிராற் பற்றப்படுவதற்குப் புலனாவது சிவமேயாகும். ஆதலால் சிவஞானி சித்தத்தைச் சிவன்பாலே வைத்தல் வேண்டும்.



சிவம், சடப்பொருள் சித்துப்பொருள் அனைத்தினும் வியாபகமாயிருக்கும். சடப்பொருள் எங்கும் பெருவியாபகமாய் நிறைந்தும், சித்தாகிய எவ்வுயிர்களிடத்தும் கிருபாநோக்கம் உடையதாயும் விளங்கும். சிவனிடத்திலே தன்அறிவை வைத்து சரியை, கிரியை, யோக அநுட்டானங்கள் எவற்றையும் அறவே கைவிட்டு அவற்றை விட்டோமென்ற அறிவுமிறந்து சிவனெனத் தானென வேற்றுமையின்றிச் சிவமாயேயிருப்பவனே மெய்ஞ்ஞானியாவன். சிவமாய் நிற்கும் அந்த நிலையிலும் நிற்பவன் உண்டு.

### 13. சிவஞானி எந்த அவத்தையினும் பந்தமுறாமை.

இன்பத்துக்குக் காரணம் பொருளாகும். என்றும் நிலையான இன்பத்தைப் பெறவிரும்பினால் என்றும் நிலைபேறுடைய பொருளைப் பெறவேண்டும். அத்தகைய நிலையான பொருள் சிவபரம் பொருளேயாகும். உயர்ந்த பொருளை அடைந்த ஒருவன் தாழ்ந்த பொருளை அடைய விரும்பாதவாறு போல நித்தியப் பொருளாகிய சிவபரம் பொருளைப் பெற்று நித்தியானந்தமாகிய சிவானந்தத்தை அனுபவிக்கும் சிவஞானி, நிலையில்லாத இன்பத்தைத் தரும் நிலைபேறில்லாத பொருள்களைத் தேடவேண்டுவதேயில்லை.

நன்மை, தீமை, (இன்னது செய்யவேண்டும் இன்னது செய்யக்கூடாது என்ற) விதி, (சமயத்துக்கும் நிலைக்கும் ஏற்ற) வேடம் என்பன உறங்கினவன் கைப்பொருள்கள் போலச் சிவஞானியை விட்டு நழுவி விடும். சிவஞானி எப்பொழுதும் ஞான நிட்டையாகிய மோனத்திலேயே இருப்பான்.

மோனம் என்ற சொல்லுக்குச் சும்மாவிருத்தல் என்பதே உண்மைப் பொருளாகும். அந்தமோனம் வாக்குமோனம், கரணமோனம், காட்டமோனம், சுழுத்திமோனம் என நான்கு வகைப்படும். அவற்றுள் வாக்கு மோனமாவது வாய் பேசாதிருத்தலாகும். வாய் பேசாதிருந்த போதும் மனம்

சும்மாவிராது. யாதேனும் ஒன்றை நினைத்துக்கொண்டேயிருக்கும். கரணமோனமாவது கண் ஒரு பொருளைப் பாராது இருத்தலும், செவி ஒரு சொல்லைக்கேளாது இருத்தலும் முதலிய இந்திரிய அடக்கமாகும். இந்த இந்திரிய அடக்கத்திலும் மனம் சும்மாவிராது. யாதேனும் ஒன்றைப்பற்றிக் கொண்டே நிற்கும். காட்டமோனமானது சரீரம் அசையாது இருத்தலாகும். அப்பொழுதும் மனஞ்சும்மாவிராது, யாதேனும் ஒன்றில் இலயித்திருக்கும். அந்த இலயத்தினின்றும் நீங்குங் காலத்துச் சரீரம் அசையும்.

வாக்குமோனம், கரணமோனம், காட்டமோனம் ஆகிய இம்மூன்றிலும் மனம் சும்மா விருத்தலில்லை. ஆதலால் இவை உண்மை மோனங்கள் என்று சிறப்பித்துச் சொல்லப்படா. சுழுத்தி மோனத்திலேயே மனம் சும்மா விருத்தல் சித்திக்கும்; கரணங்களும் ஆன்மாவும் செயலற்றிருக்கும். ஆதலால் உண்மை மோனம் என்று சிறப்பித்துச் சொல்லப்படுவது சுழுத்தி மோனமேயாகும். சிவஞானமெனச் சிறப்பித்துச் சொல்லப்படுவதுமிதுவே. ("மோனமென்பது ஞானவரம்பு". - ஔவை).

சுழுத்தி மோனமாவது சடசித்துப்பொருள்கள் அனைத்தும் தனித்து நிற்பதற்கு ஆதாரம் சிவமே எனவும், அச்சிவபரம்பொருள் மற்றெல்லாப் பொருள்களிலும் உள்ளும் புறமும் வியாபித்து நிற்பதால் அவையெல்லாஞ் சிவமே எனவும் கண்டு, கண்டோம் என்னும் போதமும் இழந்து நிற்கும் சிவஞானநிட்டையேயாகும்.

சிவஞானி ஞானநிட்டை சாதிப்பினும் ஏகாக்கிரசித்தத்தில் இலயித்திருப்பான். அந்த ஞானநிட்டையினின்றும் நீங்கிப் பிரவிருத்தி மார்க்கத்தில் யாதேனும் ஒன்றில் முயற்சி செய்யுங்காலம், கண்களால் உலகப்பொருள்களைப் பார்க்குங் காலம், மனத்தினால் அப்பொருள்களை நினைக்குங்காலம், அன்னத்தை உண்ணும் காலம், தண்ணீரைக்குடிக்குங் காலம், சாக்கிர அவத்தையைப் பொருந்துங் காலம், சொப்பன அவத்தையைப் பொருந்துங் காலம், வாத பித்த சிலேட்டுமங்காரணமாய் உண்டாம் நோய்களின் பேதத்தைப் பொருந்துங் காலம், இவையல்லாத வறுமைக்காலம், பூமியதிர்ச்சி



விண்மீன் விழுதல் போன்ற அஞ்சத்தக்க உற்பாதங்கள் நிகழுங்காலம், தொற்றுவியாதிகள் பரவுங்காலம் ஆகிய எப்பொழுதும் ஏகாக்கிர சித்தத்தில் இலயித்திருப்பான்.

முன்னரே சிந்திக்கப்பட்டது ஒன்றினை மறந்து பின்னர்ச் சிந்தியாமல் இடையறாது சிந்தித்தலே ஏகாக்கிர சித்தம் எனப்படும். அங்ஙனஞ் சிந்திக்குங் காலத்தும் சிந்திப்பது, சிந்தனை, சிந்திக்கப்படுவது என்னும் பேதம் நிகழும். சிந்திக்கின்றோம் என்னும் போதமுனைப்புமற்று, சிந்திக்கப்படும் பொருளாகவே நின்று சிவனைச் சிந்தித்தலே ஏகாக்கிர சித்தத்தில் இலயித்தலாகும்.

"அயரா அன்பின் அரன்கழல் செலுமே"

சிவஞான போதம். (சூ-11)

## 14. சிவஞானி தற்போதமற்றுச் சிவமாயிருத்தல்.

சிவஞானி இறந்தகாலம், நிகழ்காலம், எதிர்காலமாகிய முக்காலத்தும், இலாபம் என்றுஞ் சேதமென்றுஞ் சொல்லப்படுகின்ற எவைவந்தவிடத்தும் இயல்பாகவே பாசங்களின் நீங்கிய தற்சொரூப (சிவசொரூப) பாவனையே செய்வான்.

தத என்பது மகாவாக்கியம், அவ்வாக்கியத்தின் பொருள் அது என்பதேயாம், அது இது உது என்னும் வாக்கியங்கள் முறையே தூரத்திலுள்ள பொருளையும், பக்கத்திலுள்ள பொருளையும், இடைப்பட்ட பொருளையும் சுட்டும். சிவபெருமானுடைய தடத்தநிலை இது. இது என்று சுட்டப்படும் எல்லாப் பொருள்களோடுங் கலந்து அதுவதுவாய் விளங்கினும், சொரூப நிலை அப்பொருள்களுக்கு அப்பாற்பட்டிருக்கும், அப்பாற்பட்டிருத்தலாலேயே அச்சொரூபநிலையை வேதாந்தம் தத் என்று கூறிற்று. வேதாந்தத்திற் கூறப்படும் ஏனைய பொருள்களைக் குறிக்கும் வாக்கியங்கள் போலன்றி மகத்தாகிய பரம்பொருளைக் குறிப்பதால் இவ்வாக்கியம் மகாவாக்கியம் எனப்படுவதாயிற்று.

செய்யப்படுகின்ற தொழிலினிடத்து, பெற்றது கொண்டு திருப்தியடையச் செய்யும் சாத்துவிக குணத்தால் சுகமுண்டாகும்; எதுபெறினும் திருப்தியடையாது மேலும் பெறுதலிலேயே பிரவிருத்திக்கச் செய்யும் இராசத குணத்தால் துக்கமுண்டாம்; சுகதுக்கங்கள் கன்மங்காரணமாக வருவனவென்றறியாது தன்னாலும் பிறராலும் வந்தனவென்றறிந்து, சுகத்தில் இறுமாத்தலையும் துக்கத்தில் வருந்துதலையும் செய்யும் தாமத குணத்தால் மோகம் உண்டாகும். சுகமாகவும் துக்கமாகவும் மோகமாகவும் நிச்சயிப்பது புத்தியாதலின் இம்மூன்றும் புத்தியின் பரிணாமமேயாம். சுகதுக்க மோகங்காரணமாக உண்டாகும் யான், எனது என்னும் மயக்கங்கள் அனைத்தும் புத்தியின் தன்மமன்றி ஆன்மாவின் தன்மமல்ல.

தத்துவம் முப்பத்தாறினுள், ஆன்ம தத்துவம் இருபத்துநான்கும் தான் எனப்பாவித்து அனுபவிக்கப்படுவனவாய் இருக்கும். கண் பார்த்ததை நான் பார்த்தேன் என்றும், மனம் நினைத்ததை நான் நினைத்தேன் என்றும், புத்தி நிச்சயித்ததை நான் நிச்சயித்தேன் என்றும் இவ்வாறே ஆன்ம தத்துவம் இருபத்துநான்கும் ஆன்மாவால் தான் எனப்பாவித்து அனுபவிக்கப்படுவனவாயிருக்கும். வித்தியா தத்துவம் ஏழும் அனுபவத்துக்கு ஏதுவாய் இருக்குமேயல்லது அனுபவிக்கப் படுவனவாய் இரா. சிவதத்துவம் ஐந்தும், அவ்வித்தியா தத்துவங்களைப் போகத்திற்கு ஏதுவாம் வண்ணஞ் செலுத்தும். ஆதலின் ஆன்மதத்துவம் போக்கிய காண்டமென்றும், வித்தியா தத்துவம் போக காண்டமென்றும், சிவதத்துவம் பிரேரக காண்டம் என்றுங் கூறப்படும். தான் எனப்பாவித்து அனுபவிக்கப்படுவனவாய் இருக்கும் ஆன்மதத்துவமும், அத்தத்துவம் இருத்தற்கு ஆதாரமான தூலதேகமும் பிரகிருதியின் காரியங்கள். பிரகிருதி காரியமான தூல சூக்கும தேகங்களின் பற்றுக்கோடு முற்றும் நீங்கினாலன்றி, புத்தியின் பரிணாமமாகிய சுகதுக்க மோகங்கள் நீங்கா. தேகசம்பந்தம் முற்றாக நீங்கியவிடத்தே அவை புத்திதன்மம் என்பதையுணரமுடியும். பிறிதொன்றைப் பற்றினாலன்றி முன் பற்றியதொன்றை விடமுடியாது. ஆதலினாலே தேகந் தானாயிருந்த



பற்று நீங்குதற் பொருட்டுச் சிவந்தானாய் இருத்தலிற் பற்றுச்செய்ய வேண்டும். தூல சூக்கும தேகப்பற்று, வேதாந்தத்தின் உண்மைப் பொருளாகிய சிவசீவ ஐக்கியத்தை அறிபவனே உண்மை ஞானியாவான்.



மாயாவாதம், ஏகான்மவாதம் முதலியனவும் வேதாந்தம் எனவழங்கப்படினும், அவை பதி பசு பாசங்களின் நித்தியத்தை ஒப்புக்கொள்ளாமையின் போலி வேதாந்தம் எனப்படும். முப்பொருள்களின் நித்தியத்தை ஒப்புக்கொள்வதே உண்மை வேதாந்தமாகும். அந்த உண்மை வேதாந்தத்தின் முடிவே சிவாகமமாகிய சித்தாந்தம். "வேதாந்தத்தின் முடிவும் சிவாகமத்தின் முடிவும் ஒன்றே" என்னும் இவ்வுண்மை உணர்வுடையோரே மெய்ஞ்ஞானியாவார்; வேதாந்தத்தின் உண்மையாகிய முப்பொருள்களில் நித்தியத்தன்மையை அறியாதார் மெய்யுணராதாரே; அவர் மெய்ஞ்ஞானியாகார்.

## 15. சிவஞானி ஐந்தொழிலுக்கு உட்படாமை.

தன்னைச் சிவனாகவே தெரிந்துகொண்டிருக்குஞ் சீவன் முத்தனாகிய சிவஞானி, என்றும் பிறந்து இறந்து உழலாது நித்தனாய் இருத்தலைச் செய்யும் சிவஞானமாகிய அமிர்தத்தைப் பருகிக்கொண்டு, சிவபெருமான் தடத்தநிலையிற் செய்தருளும் சிருட்டி முதலிய கிருத்தியங்களுக்குட்படாது, எக்காலத்தும் அச்சிவபெருமானைப் போலவே நித்தனாய் இருப்பான்.

மிருத்துவினால் உண்டாகும் மரணத்தைத்தடுப்பது அமிர்தமாகும். மக்கள் போலத் தேவர்கள் விரைவில் இறப்பதைத் தடுப்பது தேவாமிர்தமாகும். தேவாமிர்தம் என்றும் இறவாதிருத்தலைச் செய்யாது; தேவாமிர்தம் உண்டவர்கள் இறப்பதால் அவர்களுக்கு பிறப்பும் உண்டு. என்றும் பிறந்து இறந்து உழலாது நித்தியமாயிருத்தலைச் செய்யவல்லது சிவஞானமேயாம். ஐந்தொழில் செய்பவனாகிய பரமசிவன் அந்த ஐந்தொழில்களுக்குட்படாது என்றும் ஒரு தன்மையாய் விளங்குவான். பரமசிவனேயாய் விளங்கும் சிவஞானியும்,

ஐந்தொழில்களுக்குட்படாது என்றும் ஒரு தன்மையாய் விளங்குவான். இதுவே சிவஞானி பரமசிவமாய் விளங்குவதால் உண்டாகும் பயனாகும். பரமசிவனேயாய் விளங்கினும் அவன் செய்யும் ஐந்தொழிலைச் சிவஞானி செய்வதில்லை.

பிரமசரியம் முதலான விரதங்கள், அக்கினியில் நிற்பதாகிய தவம், (பிண்டமிட்டு நீரால் தருப்பணம் செய்யும்) பிண்டோதகக் கிரியை, உலகியல் சார்பான முயற்சி செய்தல் செய்யாதொழிதல், மேற்கொள்ளும் ஆராதனைகள், மலையினின்று விழுதல், நீர்ச்சுழியில் விழுதல், புண்ணியச் செயல்கள், பாவச் செயல்கள், நியமமாகச் செய்யப்படும் உபவாச விரதம் ஆகிய இவைகள் சீவன் முத்தனுக்கு வேண்டப்படுவதில்லை.

## 16. *சீவன்முத்தன் பரமுத்தியடையும் முறைமையும் உவமையும்.*

மேலே கூறப்பட்ட தன்மையுள்ள சிவஞானிக்கு முத்தான்மா வென்று பெயர். இந்தச் சீவன் முத்தன் பிரகிருதியின் காரியமான தூல சூக்கும தேகங்களோடு சம்பந்தப்பட்டிருப்பினும் அவற்றிற் பந்தப்படான். அவனுக்குத் தேகங்களின் பந்தமில்லை. பரமுத்தி நிலையிலே தூல சூக்கும தேகங்கள் இல்லையாய் ஒழிந்துவிடும். ஆதலால் எக்காலத்தும் அத்தேகங்களின் பற்றுதலைப் பொருந்தாத பரமுத்தியை அடைவான். தேகமில்லாத கேவல நிலையில் நின்ற இவனுக்குப் பின்னர்த் தேகம் வந்தவாறு போல தேகமில்லாத இப்பரமுத்தி நிலையை அடைந்த பின்னர் எஞ்ஞான்றும் தேகம்வராது.

எண்ணெய் திரியோடு கூடிச் சுடர்விட்டு எரியும் நிலையில், அவ்வெண்ணெய் திரிகளினால் அந்தச்சுடர் பந்தப்படாது; இருளை ஒளித்து பிரகாசத்தைத் தரும். அதைப்போலவே தேகத்தோடு கூடிய சீவன் முத்திநிலையிலும் தேகசம்பந்தமான பந்தப்படாது, அஞ்ஞானமாகிய இருள் கெடச் சிவசொரூபமாய் பிரகாசிப்பன். எண்ணெய் திரியோடு கூடிநின்ற சுடர், பிரகாசித்ததற்கு ஏதுவாய் இருந்த அந்த எண்ணெய்த்திரிகள் இல்லாத நிலையில், மாபூதத்தில் இலயமாகும். அதுபோலச் சீவன்முத்திநிலையில்



இயங்கிக்கொண்டிருந்த ஆன்மவிருத்தி, தேகமில்லாத பரமுத்திநிலையில் சிவபெருமான் திருவருளோடு இலயமாய்விடும்.

எண்ணெய்த்திரி முதலிய உபகரணங்களால் பிரகாசித்துக் கொண்டிருந்த தீபம் அவ்வுபகரணங்கள் இல்லையாய் ஒழியத் தானுந் தனக்காதாரமாயுள்ள பூதத்தில் ஒடுங்குவது போலவே, தூலசூக்கும தேகங்களோடு கூடிநிற்றலால் இயங்கிக் கொண்டிருந்த சீவன்முத்த விருத்தி, அத்தேகங்கள் நீங்கிய பொழுது தனக்கு ஆதாரமாகிய சிவபெருமானுடைய திருவருளில் இரண்டற இலயமடையும்.

சீவன்முத்தி என்பது தேகத்துடன் இருந்தும் சீவத்தன்மை இல்லையாய் விடுதல். பரமுத்தி என்பது பரனைச்சார்ந்து அனைத்தும் விடுதல்.

## 17. பரமுத்தியும் உவமையும்

குடத்தால் வளையப்பட்டிருக்கும் ஆகாயம் போல சரீரத்தால் கட்டுப் பட்டிருப்பது சீவான்மா. கண்ணுக்குத் தெரியாமையால் மனத்தால் சிந்தித்து உணரப்படுகின்ற மகாகாயம் போன்றிருப்பது பரமான்மா.

குடம் உடைந்த விடத்துக் குடத்துள் இருக்கும் ஆகாயம், குடத்தால் வளையப்பட்டு குடாகாயம் என விளங்கப்படுவதற்கு முன்னர் அவ்விடத்தைச் சிந்தித்து உணரப்படுவதாயுள்ள தன்னோடு பிரிப்பின்றி நிற்கும் மகாகாயத்தோடு பிரிப்பின்றி ஒன்றுபட்டு நிற்கும். அது போலவே ஆணவமலம் காரணமாகப் பொருந்திய பிரகிருதி மாயையின் சம்பந்தமான தேக உபாதிகள் முற்றும் அறவே நீங்கிய விடத்து அந்த தேகத்தின்கண் பொருந்தி நின்ற சீவான்மாவே அநாதியே தன்னோடு பிரிப்பின்றி நிற்பது எனச் சிந்தித்து உணரப்படும் பரமான்மாவாய் ஒற்றுமைப்பட்டு நிற்கும்.

'சிவமும் ஆன்மாவும் அநாதியானவை; அவ்விரு பொருள்களும் அத்துவிதமாய்க் கலந்து நிற்பதும் அநாதி; கலந்து நிற்பினும் சிவத்தின் தன்மை ஆன்மாவினிடத்து விளங்கித் தோன்ற வொட்டாமற் செய்யும் மலத்தின் தடையும் அநாதி' என யாம் ஆரம்பத்திற் கூறியுள்ளோம். அவ்வாறு கூறியவற்றிலிருந்து பதி, பசு, பாசம் என்னும் முப்பொருள்களும் அநாதி என்பது தானே புலப்படும். அநாதிக்கு உற்பத்தியின்மையின் உற்பத்தியில்லாத பொருள்கள் நாசமாகா எனப்பட்டு, அவை நித்தியமானவை என்பதும் நன்கு விளங்கும்.

"ஆகாயம் ஒன்றாய் இருந்து குடவுபாதியால் குடாகாயம் என்று வழங்கப்பட்டு, அவ்வுபாதி நீங்கியவிடத்து ஒன்றாகிய மகாகாயமே இருக்கும். அது போலவே பரமான்மா ஒன்றே, தேகவுபாதியால் சீவான்மா எனப்பெயர் பெற்றுநின்று, அவ்வுபாதி நீங்கியவிடத்து ஒன்றாகிய பரமான்மாவே இருக்கும்" எனக் கொள்ளலாகாது. அவ்வாறு கொள்ளின் ஒருபொருள்தான் உண்டு என்ற ஏகான்மவாதமாய் முடியும்.

இங்கே குடாகாய மகாகாய உவமை, பரமுத்தி நிலையில் சீவான்மா பரமான்மாவோடு ஒற்றுமைப்படச் சேர்தல் மாத்திரையான அவ்வளவையே விளக்கும் ஒருபுடை உவமையாகும். குடத்தால் வளையப்பட்டிருக்கும் நிலையும், வளையப்படாத நிலையும் ஆகிய இருநிலைகளின் உண்மை சீவான்மா பரமான்மா என இருபொருள்கள் அநாதி நித்தமாயுள்ளவை என்பதை நன்கு புலனாக்கும். புலனாகவே ஒற்றுமைப்படச் சேர்தற்கு மட்டும் கூறிய ஒருபுடை உவமையேயிது என்பதுந் தெளிவாகும். அன்றியும் நித்தியமான இருபொருள்கள் ஒன்றுபடச் சேர்தல் மாத்திரமான அளவைக்குறிக்கும் ஒருபுடை உவமையென்பதை, 'குடாகாயம் போலச் சீவான்மாவிருக்கும்' மகாகாயம் போலப் பரமான்மாவிருக்கும்; என்றவரைவிலக்கணமே காட்டும். குடத்தால் வளையப்பட்டு ஏகதேசமாய்நின்ற ஆகாயமே, மகாகாயத்தோடு கூடி மகாகாயமாக நிறைந்து நிற்பதுபோல, என்ற உவமை வாசகமும் சீவான்மா பரமான்மாவோடு பிரிப்பின்றி ஒன்றுபடக் கூடுவது மாத்திரம் விளக்கும் ஒருபுடையுவமையாதலை ஐயந்திரிபற உணர்த்தும்.



இனி, இந்த உவமையை முற்றுவமை எனக்கொண்டு இடர்படாதொழிக. குடத்தில் மகாகாயம் வளையப்படுவதற்குக் குடத்தை ஒருவன் செய்து உதவ வேண்டும். அதுபோல பரமான்மா தேகவுபாதியிற் கட்டுப்படுவதற்கு அந்தத் தேகத்தைச் செய்து உதவ மற்றொருவன் வேண்டப்படும். அதனைத் தானே செய்து கொள்ள இயலாத பொழுது பரமான்மாவாகாது; பரமான்மாவே செய்து கொண்டதாயின் உவமையிலும் மகாகாயமே குடத்தைச் செய்தல் வேண்டும். மகாகாயஞ் சடமாதலின் குடத்தைச் செய்யாத இதனால் முற்றுவமையாகாமையை அறிக. சடமான ஆகாயம் குடத்தைச்செய்யாது; சித்தான பரமான்மாவே தேகவுபாதிகளைச் செய்யும் என்பாய் ஆயின், உன்கூற்றே முற்றுவமையாகாது என்பதைப் பறைசாற்றும்.

அல்லாமலும், சுத்தமான பரமான்மா அசுத்தமான தேகவுபாதிகளை எதன்பொருட்டுச் செய்தது? எந்தக் காலத்திற் கூடிற்று? விளையாட்டாகச் செய்து அநாதியே கூடியிருந்தது என்று கூறுவாயாகின், அநாதியே அழுக்குடைய அது சீவான்மா ஆகுமேயன்றி பரமான்மாவாயிருக்க முடியாது. முன்னர் விளையாட்டாகச் செய்து கூடியவாறே நீங்கிய பின்னரும் அவ்வாறு செய்து காட்டும் எனப்பட்டு நீக்குவதற்காகச் செய்யப்பட்டன வெல்லாம் வீணாகச் செய்யப்பட்டனவாக அல்லவா முடியும். ஆதலாற் குடாகாய மகாகாய உவமை முற்றுவமையாகாமையை அறிக.

வினை, பயன், வண்ணம், வடிவு எனும் நான்கினுள் ஒன்றைப்பற்றியே உவமை கூறப்படும். இவற்றுள் வடிவு பற்றி கூறப்பட்ட குடாகாய மகாகாய உவமையை முற்றுவமையாகக் கொண்டு இடர்ப்பட்டு மயங்கற்க.

ஆன்மாக்கள் அறிவு இச்சை செயல்களையுடையன, அவ்வான்மாக்களுக்கு அறிவு இச்சை செயல்களின் தொழிற்பாடு சிறிதளவும் நிகழாது ஆணவமலம் அநாதியே தடைசெய்து நிற்கும் ஆற்றலுடையது. ஆணவமலத்தின் மறைப்புக்காரணமாக வருந்தும் உயிர்கள் அம்மறைப்பால் உளதாம் துன்பத்திலிருந்து நீங்கி

இன்பத்தை அடையும் பொருட்டு இறைவன், மாயையினின்றும் உடல் கருவி ஆகியவற்றைத் தந்தருளுவார். ஆன்மாவின் சாதி சித்து; தேகத்தின் சாதி சடம் ஆதலின் ஆன்மாவிற்குத் தேகம் உபாதியாகும். சீவன்முத்தி நிலையில் இந்த உபாதிகள் ஆன்மாவின் அறிவிலிருந்து நீங்கினாலும் இவ்வுபாதிகளின் சம்பந்தமும் நீங்காது; அவ்வாறன்றி பரமுத்தி நிலையில் அவ்வுபாதிகளின் சம்பந்தமும் அறவே நீங்கும். ஆன்மாவிற்குச் சார்ந்ததன் வண்ணமாந் தன்மையுண்டு. ஆதலின் தேகத்தோடு கூடிச் சீவான்மாவாய் நின்ற அதுவே பரமான்மாவோடு கூடினவிடத்து அப்பரமான்மாவாய் நிற்றற்கு இழுக்கில்லை. இம்முடிபு சகல ஆகமங்களின் சாரமாகும்; சகல ஆகமங்களையும் தோற்றுவித்த சர்வஞ்ஞனான எம்மாலேயே இம்முடிபுஞ் சொல்லப்பட்டது.

சாதி, ஒருபொருளின் இயற்கைத் தன்மை, உபாதி, ஒரு பொருளின் செயற்கைத் தன்மை, ஒருபொருளுக்கு இயல்பாயுள்ள தன்மையே இயற்கைத் தன்மை. ஒருபொருளுக்குச் செய்து கொள்ளுதலால் உள்ள தன்மையே செயற்கைத் தன்மையாகும். இயல்பாயுள்ள தன்மை என்றும் உள்ளது. செய்து கொள்ளுதலால் உள்ள தன்மை இடையே வந்து கூடியதாகும். என்றுமுள்ளது நீங்காது; இடையே வந்து கூடியது நீங்கும். இடையே வந்து கூடிய செயற்கை உள்ளவிடத்தும் இயற்கை விளங்கித் தோன்றுதலில்லையேயன்றி நீங்குதல் இல்லை. செயற்கை நீங்கின பொழுது இயற்கை விளங்கித் தோன்றும். பின்வரும் உதாரணவாயிலாகவும் இதனை அறிந்து கொள்ளலாம். ஒருவன் பல வேடங்கள் கொள்ளுதல் செயற்கை; அங்ஙனம் செயற்கை வேடம் கொள்ளுங்காலத்து அவனுடைய இயற்கைத்தன்மை விளங்கித் தோன்றுதலில்லையேயன்றி நீங்குதலில்லை. கொண்ட வேடங்கள் நீங்கிய பொழுது இயற்கைத் தன்மை விளங்கித் தோன்றும்.

எக்காலத்தும் பரமான்மாவோடு பரிப்பின்றி நிற்றலே சீவான்மாவுக்கு இயற்கைத்தன்மை, தேகவுபாதிகளோடு கூடிநிற்றல் அதற்குச் செயற்கைத் தன்மையாகும். இவ்வுபாதி ஆணவ மலத்தை நீக்குவதற்காக இடையே வந்து கூடியது. இத்தேகவுபாதிகளோடு கூடிநிற்குங் காலத்துப் பரமான்மாவோடு



பிரிப்பின்றி நிற்றல் விளங்கித் தோன்றுதலில்லையேயன்றி நீங்குதல் இல்லை. தேகவுபாதிகள் முற்றும் நீங்கிய பொழுது பரமான்மாவோடு பிரிப்பின்றி நிற்றல் விளங்கித் தோன்றும். இவ்வளவேயன்றிப் புதிதாக பரமான்மாவாதலில்லை என்பதை உணர்ந்துகொள்க.

இடையே வந்து கூடியது செயற்கை எனப்படுவதால் சீவான்மாவோடு அநாதியே கூடியுள்ள ஆணவமலம் இயற்கை எனப்படவேண்டும். வேண்டவே இயற்கையாய் உள்ள ஆணவம் எக்காலத்தும் நீங்காதென்று கொள்ள வருமாலோவெனின், அங்ஙனம் கொள்ள வராது. ஒருபொருள் தன்னோடு ஒத்தசாதிப் பொருளோடுதான் பிரிப்பின்றி நிற்றல் கூடும். வேற்றுச் சாதிப்பொருளோடு பிரிப்பின்றி நிற்றல் கூடாது. ஆற்று நீர், தன்னோடு ஒத்த சாதிப்பொருளாகிய கடல் நீரோடு பிரிப்பின்றி நிற்கும்; வேற்றுச்சாதிப் பொருளாகிய உப்புடன் பிரிப்பின்றி நிற்பதில்லை; நீரினின்றும் உப்பைப் பிரித்தெடுப்பதால் அஃது அறியப்படும். ஆயினும் நீரோடு உப்பைக் கூட்டி உப்புக் கடலாக ஒருவராலிடையே ஆக்கப்படாமையின், கடல் நீருக்கும் உப்புக்கும் உள்ள சம்பந்தம் அநாதி சேர்க்கை அந் நீருக்கும் வெளிக்கும் உள்ள சம்பந்தம் தாதான்மிய சம்பந்தம் (இரு பொருள்கள் பிரிக்கமுடியாது கலந்து நிற்றல் தாதான்மிய சம்பந்தம்)

இவ்வாறே சீவான்மா தன்னோடு ஒத்த சித்துச் சாதிப்பொருளாகிய பரமான்வாவோடு பிரிப்பின்றி நிற்றல் இயற்கை. வேற்றுச் சாதிப் பொருள்ாகிய சடம்என்னும் ஆணவமலத்தோடு கூடிநிற்றல் அநாதி செயற்கை. ஆதலினால் முத்திக்காலத்தில் ஆணவமலம் நீங்குதற்கிழுக்கில்லை என்றுணர்க. அநாதி செயற்கையாயிருந்து பின்னர் நீங்குமென்பதற்கு உவமையாக நெல்லினிடத்து உமியும் செம்பினிடத்துக் களிம்பும் அநாதி செயற்கையாயிருந்து பின்னர் நீங்குமென முன்னரே எம்மாற் காட்டப்பட்டன.

சீவான்மா பரமான்மா என்னும்இரண்டு சொற்களினிடத்திலும் ஆன்மா என்னும் சொல்லைப் புணர்த்திக் கூறுவது, சீவனும் சிவனும் சித்தெனும் சாதிப் பொதுமையால் ஒத்தன என்பதை உணர்த்துதற்கேயென அறிக.

இப்பகுதியாற் கூறப்பட்ட பொருள்:- ஆகாயம் என்னும் சாதிப் பொதுமையால் குடாகாயம் மகாகாயம் ஒன்றாயவாறு போல, சித்தெனுந் சாதிப்பொதுமையால் சீவான்மாவும் பரமான்வாவும் ஒன்று; ஆயினும் மகாகாயம் பற்றின்றியும் குடாகாயம் குடத்தைப் பற்றியும் நிற்குமாறு போல, பரமான்மா ஒன்றினும் தோய்வின்றிச் சுயம் பிரகாசமாயும் சீவான்மா யாதேனும் ஒன்றைப்பற்றி அதன் மயமாயும் நிற்கும்; குடம் உடைந்த பின்னர் குடாகாயம் மகாகாயமாய் ஒன்றுபட்டு நிற்குமாறுபோல தேகவுபாதிகள் நீங்கிய பின்னர் பரமுத்தியில் சீவான்மாவிற்கு வேறு பற்றுக்கோடு இல்லாமையின் பரமான்மாவோடு ஒன்றுபட்டு நிற்கும் என்பனவாம்.

18. *சகல ஆகம சாரமான முடிபு.*

சகல ஆகம சாரமான இந்த ஆகமத்திற் கூறியவாறு சிவசிவ ஐக்கியத்தை எவனொருவன் அறிகின்றானோ அவனே நாம்; முற்றுணர்வுடைய பூரணனான எம்மைச் சார்ந்த அவன் முற்றுணர்வுடைய பூரணன்.

சமயங்களும் சமயசாத்திரங்களும் பலவாயிருத்தலினாலே அவற்றுள் அங்கமிது அங்கியிது என்பதைத் தத்துவங்களை ஆதாரமாகக் கொண்டுதான் நிச்சயிக்கப்படும். மதமும் மறுப்பும் தத்துவங்களில் வைத்தே நிருணயிக்கப்படும்.

"ஆகின்ற தொண்ணூறோ டாறும் பொதுவென்ப
ராகின்ற வாறா றருஞ்சைவர் தத்துவம்
ஆகின்ற நாலேழ் வேதாந்தி வைணவர்க்கு
ஆகின்ற நாலாறை யைந்துமா யாவாதிக்கே"

என்பது திருமந்திரம்.

பௌட்கரம், மிருகேந்திரம் முதலிய ஆகமங்கள் சுபக்கமாகிய சித்தாந்தப் பொருளைப் பொதுவகையாகக் கூறின. அவை பல வழியாலும் பரபக்கங்களாகிய புறச்சமயங்களின் கொள்கைகளை மறுப்பதையே கருத்தாகக் கொண்டெழுந்தன. ஆதலால் அவை தத்துவக்கூட்டங்களின் தோற்ற ஒடுக்கங்களைப் பற்றி விரிவாகக் கூறுகின்றன. சித்தாந்தப் பொருளைச் சிறப்பாகக் கூறும் இவ்வாகமத்தை நோக்கும் போது அப் பொருளைப் பொதுவாக கூறிய அவ்வாகமங்கள் முந்தியவை. அவ்வாகமங்களின் சாரம்,பதி,பசு,பாசங்கள் அநாதிநித்தம் என்பதும்,அவை முறையே வியாபக வியாப்பிய வியாத்தி என்பதுமாம்.



முந்திய ஆகமத்திலுள்ள சாரத்தின் சாரமான இந்த ஆகமத்தில், சீவான்மா மலத்தினிடையினின்றும் நீங்கிப் பரமான்மாவோடு என்றும் பிரிப்பின்றி நிற்றலை உணர்ந்து, பரமான்மாவாக நிற்றல் என்பதும், சீவான்மா பரமான்மாவோடு பிரிப்பின்றி நிற்றலே சிவயோகமெனப்படும் என்பதும் உணர்த்தப்படுகின்றது.

சகல ஆகம சாரமான இந்த் ஆகமத்தால் ஒருவன் சீவான்மா பரமான்மாவோடு ஐக்கியமாதலைக் கூறும் இப்பொருளுக்கு மேல் அறியப்படவேண்டிய பொருள் வேறொன்றும் இல்லை என்றுணர்வான்; சிவம் நானெனப் பாவனைசெய்து பழகி, அந்தப்பழக்க முதிர்ச்சியால் நிட்டை கூடுவான்; மனத்தின் கண்உள்ள சங்கற்ப விகற்பங்களெல்லாம் அறவே நீங்கப்பெற்றுச் சீவன் முத்தனாவான்; ஊழின் பயனை அனுபவித்துக் கொண்டிருந்த உடல் கழிந்த விடத்துப் பரமுத்தியடைந்து சிவத்தின் சுபாவமே தனது சொந்த அனுபவமாக வாழ்வான்.

பாலின் சாரம் நெய்; அந்த நெய்யின் சாரம் சுவையாதலின் அச்சுவை சாரத்தின் சாரமெனப்படும். படவே, வேதம் பசு; சிவாகமங்கள் பால்; அச்சிவாகமங்களின் தந்திரகலை, மந்திரகலை, உபதேசகலை என்னும் மூன்றினுள் உபதேசகலை நெய்; இச்சருவ ஞானோத்தரம் அந்த நெய்யின் சுவையென உய்த்துணர்ந்து கொள்க.

# ஆன்ம சமாதிப் பிரகரணம்.

(இப்பகுதியில், தன்னுண்மை விளங்கிய ஆன்மா, சிவனுக்குரிய முற்றுணர்வு முதலிய எண்குணங்களே தன்குணங்களாக விளங்குதற் பொருட்டு அவ்வுண்மையில் நிலைபெற்று நிற்கும் நிட்டையைப் பற்றிக் கூறப்படுகின்றது.)

## 1. பரமுத்தியில் சிவனது இயல்பே ஆன்மாவின் இயல்பாக விளங்குதல்.

சிவம், எவ்விடத்தும் நிறைந்து நிற்பது; நிறைவுக்குட்பட்டு வியாப்பியமாய் விளங்கும் பசு, பாசங்களினிடத்துப் பற்றுக்கோடின்றி, அப்பொருள்களுக்கு அப்பாலாந் தன்மையுள்ளது; உயிர், (அவ்வுயிர் தங்குதற்கிடனாகிய) உடல், (அவ்வுடல் தங்குதற்கிடனாகிய) பூதபௌதிக உலகங்கள் ஆகிய அனைத்துமாக விளங்குகின்ற பிரபஞ்சத்தில் உள்ளும் புறமும் ஒத்து அத்துவிதமாய்ப் பிரகாசிப்பது.

அத்தகைய சிவனே நான் எனச் சிவஞானத்தால் அறிந்தவன் தேகத்தோடு கூடிச் சீவன்முத்தனாய் இருப்பான்; அவன் தேகம் நீங்கிய பின்னர் பரமுத்தி எனப்படும் மேலான நிலையையடைவான். அப்பரமுத்தியில் சிவத்தின் குணமே தனக்குக் குணமாகித் தான் அந்தக் குணமுடையபொருளெனச் சிவனோடு பிரிப்பின்றி ஒன்றாய் நிற்பன். ஒன்றாய் நிற்றலால், விளங்கித் தோன்றும் சிவனது இயல்பே தனது இயல்பாய் (சிவப்பிரகாசமாய்) விளங்குவான்.

தத் என்பது சிவத்தைக் குறிக்கும் மகாவாக்கியம். சிவத்தின் தருமமே ஆன்மாவுக்குத் தருமமாய் ஆன்மா தருமியாய் நிற்றலால் அவ்வான்மா தத் தருமதருமி எனப்படும். தருமம் குணம் என்பன ஒரு பொருட் சொற்கள். எண்குணங்களாகிய தருமத்தால் பரமான்மாவாகிய தருமியுண்மையையும் எண்குணங்களைப் பற்றி



அதுவாய் நிற்றலாகிய தருமத்தால் சீவான்மாவாகிய தத் தருமதருமியுண்மையையும் அறியப்படும். ("எண்குணத்துளோமே" என அப்பர் அடிகளும், "எண்குணஞ் செய்தவீசனே" என மணிவாசகரும் அருளிய திருவாக்குகளை ஓர்க.)

ஞானம் முதல்வனுடைய குணம். ஞானம் என்ற ஒரு குணமே வியாபார பேதத்தால் எண்குணங்களாயிற்று. குணம் எட்டாயினும் குணி ஒன்றே. நெருப்பிலே சூடு செம்மை முதலிய பல குணங்கள் இருப்பது போல முதல்வனிடத்தும் ஒற்றுமைப்பட்ட எண் குணங்கள் இருக்கின்றன. வேற்றுமைப்பட்டபல குணங்களே ஒரு பொருளிடத்து இருத்தலாகாது. ஆதலால் குணங்கள் எட்டாகவும் முதல்வனாகிய பொருள் ஒன்றாதலென்னை என மயங்கற்க.

ஆன்மாக்கள் அநாதியே சிவனோடு பிரிப்பின்றி நிற்பன. இதனைக் கருத்திற் கொண்டே சில ஆகமங்கள் ஆன்மாக்களுக்கு ஆநாதியே எண் குணங்களுண்டு எனக் கூறுகின்றன. எண்குணங்களும் ஆன்மாவினிடத்து அநாதியேயுள்ளனவாயின் (அவற்றுள் ஒன்றாகிய இயல்பாகவே பாசங்களின் நீங்குதலுக்கு மாறாக) இயல்பாகவே பாசத்தோடு கூடுதல் பொருந்தாது. ஆதலால் பாசத்தினால் எண்குணங்களும் விளங்கித் தோன்றவில்லை என்று கூறுதலாகாது. பாசசம்பந்தத்தால் உண்டாகியஎண்குணம்விளங்காமையே பாசசம்பந்தத்திற்குக் காரணம் என்று கூறுதலுமாகாது. பாசத்தால் எண்குணம் விளங்கித்தோன்றவில்லை என்பதும், எண்குணம் விளங்கித் தோன்றாமையின் பாசத்தைக் கூடிற்று என்பதும் பொருந்தாக் கூற்றுக்களாம். இக்கூற்றுக்களினால் எண்குணங்களும் அநாதியே ஆன்மாவுக்கு இல்லை என்பது தெளிவாகின்றது. ஆன்மா சார்ந்த பொருளின் தன்மையே தன் தன்மையாகக் கொண்டு நிற்கும் இயல்புடையது. அவ்வான்மா சிவனைச் சார்ந்தவிடத்து சிவத்தின்தன்மையாகிய எண்குணங்களுந் தன்மாட்டு விளங்கித் தோன்றுதலே பொருத்தமுடைத்து.

தத்தருமத்தால் தருமி என்னுங் காரணம் பற்றியே தத்தருமதருமி என்னும் பெயர் ஆன்மாவுக்கு வந்தது. தத்தருமதருமி என்பதற்கு இவ்வாறன்றிச் தத்தருமம் போலும் தருமத்தையுடைய தருமி எனப் பொருள் கொள்ளல் ஆகாது. அங்ஙனம் பொருள் கொள்ளுதற்கு அத்தொடர் தத்தருமதருமம் என்றோ தத்தருமி என்றோ அமைந்திருத்தல் வேண்டும். அவ்வாறின்மையின் அவ்வாறு பொருள் கோடல் குற்றமென விடுக.

## 2. *சிவனுக்கு இயல்பாயுள்ள எண்குணங்கள்.*

சிவனுக்கு இயல்பாக எண்குணங்களுண்டு. அவை முற்றுமுணர்தல், வரம்பிலின்பமுடைமை, இயல்பாகவே பாசங்களினீங்குதல், தன்வயத்தனாதல், பேருளுடைமை, முடிவிலாற்றலுடைமை, இயற்கை உணர்விளனாதல், தூயஉடம்பினனாதல் என்னும் எட்டுமாம். அவற்றுள் முற்றுமுணர்தலென்பது அனைத்துயிர்களையும் அவ்வுயிர்களுக்கு வேண்டத்தக்கவற்றையும் அறிதலாகும். அவ்வாறறிதல் தான் இன்புறுதற்காகவன்றி அவ்வுயிர்களுக்கு இன்பஞ்செய்தற் பொருட்டேயாம். வரம்புக்குட்படாத உயிர்களுக்கு இவ்வாறு இன்பஞ்செய்தல் வரம்பிலின்பமுடைமை எனப்படும். மலத்தடை நீங்கப்பெற்றவுயிர் முதல்வனைச்சார்ந்து முதல்வனோடு பிரிப்பின்றி ஒன்றாய் நின்று வரம்பிலின்பமுடையதாய் விளங்கும். இவ்வாறு இல்லாமல் இயல்பாகவே வரம்பிலின்பமுடைமையே இயல்பாகவே பாசங்களினீங்குதலாகும். இயல்பாக மலத்தின் வயப்படாமையால் பரிபூரண சுதந்திரனாதலே தன்வயத்தனாதல் எனப்படும். வரம்பில்லாதவுயிர்களுக்கு எல்லையற்ற இன்பம் தந்தருளும் கிருபையுடைமையே பேரளுடைமையாம். அளவில்லாத உயிர்களுக்கு வேண்டத்தக்க வெல்லாம் அறிந்து அறிந்தவாறே செய்யும்வல்லபமே முடிவிலாற்றலுடைமை. வினையின் நீக்கி விளக்கப்படும் அறிவினையுடைய உயிர்களுக்காக இயல்பாகவே வினையின் நீங்கி விளங்கிய அறிவினையுடைமையாம். ஞானமே முதல்வனின் வடிவாதலின் தூய உடம்பினனாதல் அமையும்.



இவ் வெண்குணங்களுள் இயற்கையுணர்வினனாதலை இயல்பாகவே பாசங்களின் நீங்குதலிலும், தூயவுடம்பினனாதலை பேருளுடைமையினும் அடக்கி ஆறு குணங்கள் என்று கூறுதலும் உண்டு. இவ்வெண் குணங்களும் ஞானத்தின் இயற்கைத் தன்மையேயாகும். இக்குணங்கள் மாயையின் காரியமான சத்துவம் முதலிய முக்குணங்களின் பாற்படா. மாயாகாரியமான முக்குணங்களில்லாதவனாதலினால் ஆகமங்கள் முதல்வனைக் குணாதீதன் என்று எடுத்துக் கூறுகின்றன. ஒவ்வொரு பொருளுக்கும் ஒவ்வொரு குணமுண்டு. குணமில்லாத பொருள் (குணி) கிடையாது. குணிதோன்றும் பொழுதே குணமும் உடன்தோன்றும். குணாதீதன் என்பதற்கு ஞான குணமுள்ளவன் என்பதே பொருள். மாயா குணமில்லாதவன் எனவே ஞான குணமுள்ளவன் என்பது தானே தோன்றும்.

## 3. இவ்வாகமத்திற் கூறப்பட்ட சுத்தாத்துவித முத்தியே மேலானது.

முத்தி என்னுஞ் சொல்லுக்கு விடுதல் என்பதே பொருளாகும். முதல்வன் குருவாக எழுந்தருளிவந்து விடுவிக்க உயிர் தன்னோடு அநாதியே கூடிநின்ற மலத்தை விடுதலே முத்தியெனப்படும். உயிர் அநாதியே மலத்தோடு கூடி அம்மலத்தினாலுண்டான துன்பத்துக்காற்றாது வருந்தும். அவ் வருத்தத்தை அவ்வுயிருக்குயிராயிருக்கும் முதல்வன் அறிந்து இரங்கி தனுகரண முதலியவற்றை அவ்வுயிருக்குதவுவார். தனுவாதிகளால் மலபரிபாகம் ஏற்பட்டு இருவினையொப்பு சத்திநிபாதம் உண்டாகும்போது முதல்வன் வெளிப்பட்டு குருவாய் வந்து மலத்திலிருந்து விடுவிக்க உயிர் விடுதலையடையும்.

மலம் அநந்த சக்திகளையுடையது. அதனால் அம் மலநீக்கமும் பல்வேறு வகைப்படும். படவே முத்தியும் பலவிதமாகும் என்பது தானே விளங்கும். ஆதலால் உயிர்களின் பக்குவத்திற்குத் தக்கவாறு பலவித முத்திகளையும் நாம் ஆகமங்களிற் கூறினேம்.

முத்தி என்பது தொகையால் ஒன்றாகும்; வகையால் பதமுத்தி பரமுத்தி என இருதிறப்படும்; விரியால் பதமுத்தி, சாலோகசாமீப சாரூபமென மூவகையாகவும், பரமுத்தி, அபரசாயுச்சியம் பரசாயுச்சியம் என இருவகையாகவும் பலவேறுவகைப்படும். இவற்றுள்ளே பதமுத்தி என்பது சிவலோகத்தை அடைந்து மலசக்திகளின் ஏகதேசம் (ஒருபகுதி) நீங்கப்பெறும். (பதமென்பது உலகமெனப் பொருள் படும்) பரமுத்தி என்பது பரனையடைந்து மலசக்தி முற்றும் நீங்கப் பெறுதலாகும்.

சாலோக முத்தியாவது சிவலோகத்துள் எங்குந் தடையின்றிச் சஞ்சரித்து அங்குள்ள போகங்களை அனுபவித்து வாழ்தலாம். முத்திசாதனம் சிவசரியை.

சாமீபமுத்தியாவது சிவலோகத்துள் சிவபெருமானுடைய சமீபத்திலிருந்து அங்குள்ள விசேட போகங்களை அநுபவித்து வாழ்தலாம். முத்திசாதனம் சிவகிரியை.

சாரூப முத்தியாவது சிவபெருமானது உருவத்தையொத்த உருவமம், அவன் அணிந்திருக்கும் ஆபரணங்களையொத்த ஆபரணங்களும், அவரநுபவத்தையொத்த போகநுகர்ச்சியும் பெற்றுச் சிவலோகத்து வாழ்தலாம். முத்திசாதனம் சிவயோகம்.

அபரசாயுச்சியமுத்தியாவது சிவபெருமானது உருவத்தைப் பெற்று அவரால் அதிட்டிக்கப்பட்டு அவர் செய்யும் அதிகாரங்களையும் அவர் போலவே செய்துகொண்டு வாழ்தலாம். முத்திசாதனம் சிவசரியை முதலிய மூன்றிலுமுள்ள ஞானம். அம்முத்தி பொதுவாகப் பரமுத்தி எனப்படினும் உண்மையாகப் பார்க்குமிடத்துப் பதமுத்தியேயாகும்.

பரசாயுச்சிய முத்தியாவது சிவபெருமான் திருவருளின் இரண்டறக் கலந்து சிவமாய் நின்று சிவானந்தத்தை அனுபவித்தலாம். முத்திசாதனம் சிவஞானத்தில் ஞானம்.

இம்முத்திகளுள் சாலோகம் சாமீபம் ஆகிய இரண்டும் சிவன் வேறு தான் வேறாய் நிற்றாலே பேதமுத்தி எனப்படும். சாரூபமும் அபரசாயுச்சியமும் பொருளாற் பேதமும், உருவாலும் தொழிலாலும்



அபேதமும் ஆதலின் பேதா பேதமுத்தி எனப்படும். பரசாயுச்சியம் பொருட்டன்மை பற்றி சீவான்மா பரமா வென்னும் இரு பொருள்களுண்டெனினும் பிரித்தறியவாராது கலந்து நிற்றலின் அபேதமுத்தி எனப்படும்.

பேதம் துவிதமெனவும், பேதாபேதம் விசிட்டாத்துவிதம் எனவும், அபேதம் அத்துவிதம் எனவும் கூறப்படும். படவே உயிரும் முதல்வனும் அத்துவிதம் என்று வைத்து அபேதமுத்தியும், துவிதமென்று வைத்துப் பேதமுத்தியும், விசிட்டாத்துவிதமென்று வைத்து பேதாபேதமுத்தியுங் கூறப்படும்.

விசிட்டம் அத்துவிதம் என்னுமிரு சொற்கள் சேர்ந்து விசிட்டாத்துவிதம் என்றாயிற்று. விசிட்டமாவது விசேடன விசேடியங்களின் கூட்டமாகும். நீலகண்டம் விசேடணம். அதனையுடைய திருமேனி விசேடியம். இவ்விரண்ரண்டையுஞ் சேர்த்து நீலகண்டன் என்ற பொழுது விசிட்டம். இந்த விசிட்டம் சிவனுக்குஞ் சீவனுக்கும் அபேதமாயிருத்தலின், இது சைவவிசிட்டாத்துவிதம் என்றாயிற்று. இந்த விசிட்டாவித்துவிதம் அடையடுக்காத சுத்தாத்துவிதமாகாது. ஈண்டுச் சுத்தமென்றது கேவலம். விசிட்டம் என்ற யாதோரடையாலும் விசேடிக்கப்படாது நிற்றலையென்க.

சுப்பிரமணியனே கேட்பாயாக:-

முத்தியில் இச்சையுடைய உத்தம அதிகாரி முமூட்சு எனப்படுவான். அவ்வுத்தம அதிகாரிக்கு வேண்டப்படும் மேலான முத்தி சுத்த அத்துவிதமுத்தியேயாகும். துவிதமுத்தியும் விசிட்டாத்துவித முத்தியும் அத்துணைச் சிறந்தனவல்ல. ஆன்மாக்களின் பக்குவத்திற்குத் தக்கவாறு பலவகை முத்திகளையும் ஏனைய ஆகமங்களில் விரித்துக்கூறினோம். மேலான முத்தியை அடைய விரும்பும் உத்தம அதிகாரிக்குரிய சுத்தாத்துவித முத்தியை அவ்வாகமங்களிலே பொதுவகையாகக் கூறிவைத்தோம். சருவஞானோத்தரம் எனும் இவ்வாகமத்தில் சுத்தாத்துவித முத்தி ஒன்றினையே தனித்தெடுத்துச் சிறப்புவகையாற் கூறியுள்ளோம். சீவான்மா பரமான்மாவோடு பிரிப்பின்றி ஒன்றாய் நிற்றலை யுள்ளவாறுணர்ந்து பரமான்மாவின்

தன்மை சீவான்மாவினிடத்து விளங்கப் பெறுதலே சுத்தாத்துவித முத்தியாகும். இவ்வாகமத்தில் கூறிய சுத்தாத்துவிதமெனும் இம்முத்திக்கு மேல் அறியற்பாலன ஒன்றுமில்லை; இல்லை; இல்லை; இல்லை. முதலாவது சத்தியம்; பின்னரும் சத்தியம்; முக்காலும் சத்தியமாகும்.

## அத்துவிதப் பொருள்

அத்துவிதம் என்னும் சொல்லின் நகரத்துக்கு அன்மைப் பொருளும், இன்மைப் பொருளும், மறுதலைப் பொருளுங் கொள்வர். சித்தாந்தசைவர் அன்மைப்பொருள் கொண்டு சீவான்மாவும் பரமான்மாவும் பிரிப்பின்றிக் கலந்து நிற்றல் என்பதே அத்துவிதம் என்னும் சொல்லின் உண்மைப் பொருளாகக் கொண்டனர். ஏகான்மவாதிகள் இன்மைப்பொருள் கொண்டு அத்துவிதம் என்னும் சொல்லுக்குப் பொருள் ஒன்று எனக் கூறுவர். இவர்கள் பிரமம் ஒன்றேயன்றிப் பசுபாசங்களாகிய வேறு பொருள் இல்லையென்பர். இதனால் இவர் கேவல அத்துவிதி எனப்படுவர். (கேவலம் - பிரமம்)

இராமாநுசர் அவ்வாறே ஒன்று என்று பொருள் கொண்டு விசிட்டமாகிய நாராயணன் ஒருவனேயென்பர். தன்னோடு இயைபுடைய பசுபாசங்களாலும், குணங்களாலும், விசேடிக்கப்பட்டு விசிட்டமாய் நின்ற பிரமம் இரண்டில்லை ஒன்று என அத்துவிதச்சொல்லுக்குப் பொருள் கூறுபவர் விசிட்டாத்துவிதி எனப்படுவர்.

இனி, மத்துவர் மறுதலைப் பொருள் கொண்டு அத்துவிதம் என்னுஞ் சொல்லுக்குப் பொருள் ஒன்று எனக்கூறி ஒன்றன் மறுதலையாகிய இரண்டும் உண்டு என்பர். இதனால் இவர் துவைதி எனப்படுவர்.

## 4. அத்துவித முத்தியடைந்த சிவஞானியின் பெருமை

சீவன் முத்தன சிவன் வேறு தான் வேறு என்ற விகற்பமின்றிச் சிவனே தானாக விளங்குவான். அவன் ஞானமயமாய் விளங்கும் நின்மலனைப் பாவிக்கும் சிவபாவனையுடையவன். ஆதலால், அச்சீவன் முத்தன் இறப்பு, நிகழ்வு, எதிர்வு ஆகிய முக்காலங்களிலேயும் அன்புடன் தன்னையடைந்தோரைத் தீட்சைகளால் ஆணவமலமாகிய இருளை நீக்கி முத்தராகும்படி செய்வான்.



தீட்சைகள் பலவகைப்படும். அவற்றுள், நயன தீட்சையாவது ஆசிரியன் உண்மைப் பொருளிலே சித்தத்தை வைத்து அச்சித்த விருத்தியோடு கூட மாணாக்கனை அவனுடைய பந்தம் நீங்கும்படி கண்ணால் அநுக்கிரகித்துப் பார்த்தலாம். பார்வை, அநுக்கிரகம், என்றும் நிக்கிரம் என்றும் அவ்விரண்டுமில்லாத பொது என்றும் மூவகைப்படும். அம் மூன்றனுள் அநுக்கிரகமான பார்வையே நயன தீட்சை எனப்பட்டது. மானசதீட்சையாவது ஆசிரியன் தன்னுடைய யோகப் பயிற்சியால் மாணாக்கனுடைய இருதயத்திற் பிரவேசித்து அவனறிவிலே சிவமாந் தன்மை விளங்கும்படி செய்தலாகும். வாசக தீட்சையாவது மந்திரத்தை உபதேசித்தலாகும்; சாத்திர உபதேசமும் இதனுள் அடங்கும். பரிசதீட்சையாவது ஆசிரியன் தனது வலதுகையில் சிவபெருமானைப் பாவனை செய்து பூசித்து அக்கையால் மாணாக்கன் தலையைப் பரிசித்தலும், தனது திருவடியை அவன் சிரத்திலே சூட்டுதலுமாம்.

சீவன் முத்தனாக விளங்கும் சிவஞானியை வழிபடுவோர் முத்தராவர். பகைமை கொண்டு அச்சீவன் முத்தரை இகழ்ந்தவர் அதோகதியாகிய நரகத்தையடைவர். (நரகம் கீழுலகமாதலின் அதோகதி எனப்படும். (கதி-செல்லுமிடம்). சிவஞானி செல்லுகின்ற இடமெங்குஞ் சிவபெருமான் விளங்கித் தோன்றி அநுக்கிரகம் புரிவார். ஆதலாற் சிவஞானி செல்லுகின்ற பூமி தல விசேடமுடையதாகும்; அவன் சென்று வழிபடுகின்ற ஆலயம் மூர்த்தி விசேடமுடையதாகும்; அவன் சென்றாடும் நீர் தீர்த்த விசேடமுடையதாகும். (*சிவஞானிகள் செல்லும் தலமும் ஆலயமும் தீர்த்தமும் விசேடமுடையதென்பதை திருஞானசம்பந்தர் முதலிய பெரியோரால் தரிசிக்கப் பெற்ற தலமுதலியன இன்றும் விசேடமுடையனவாய் விளங்குதலில் வைத்து அறியலாம்.)*

சீவன் முத்தன் சுவானுபவ நிலைபற்றிச் சொரூபசிவமாவான். தேகத்தோடு காணப்படுதல் பற்றி தடத்த சிவமுமாவன். ஆதலின் சிவன் அவனே. நாமும் அவனே. (*நாமும் என்பது சுப்பிர மணியருக்கு இதை உபதேசிக்கும் ஸ்ரீ கண்டருத்திரரைக் குறித்தது.)*

5. பரமுத்தியடைவதற்கு மற்றுமோர் உபாயம் குரு பாவனை.

ஆன்மாவுக்கு என்றுமுள்ள இயல்பான தன்மை பரமான்மாவோடு பிரிப்பின்றி ஒன்றாய் நிற்றலாகும். இது ஒன்றே நிலையானது; ஏனையவெல்லாம் நிலையற்றவை. ஆன்மா பரமான்மாவாதற்குத் தன்னை அப்பரமான்மாவாகப் பாவித்து உபாசனை செய்ய வேண்டும். அதனாலே தான் பரமான்மாவாக விளங்குதல் கூடும்.

நுண்ணிய அறிவுடையோரே அறிவுக்குத் தூலமாகப் புலப்படாத பரமான்மாவை எல்லாப் பொருள்களிடத்தும் புலப்பட்டதாக வைத்து உபாசிப்பர். நுண்ணுணர்வினருக்கன்றி ஏனையோர்க்குச் சிவபாவனை செய்ய இயலாது. நுண்ணறிவு இல்லாதவரும் பர முத்தியடைவதற்கு உபாயமுண்டு. அவர்கள் நிலையான பரமான்மாவாய் நிற்கும் ஆன்மாவின் உண்மைத் தன்மை விளங்கித் தோன்றப் பெறவும், பொருந்தி நிற்குங் கரணங்கள் சிவ கரணங்களாகவும் இன்னுமோர் உபாயஞ் சொல்லுகின்றோம்; கேட்பாயாக. அவ்வுபாயம் மேலே கூறப்பெற்ற பரமான்மாவாவதற்கு ஏதுவாயிருக்கும்.

காணப்படும் பொருள்கள் அனைத்தையும் முன்னிலையாக நின்று உபதேசிக்கும் குருவாகிய என்னுடைய சொரூபமாகப் பாவித்து உபாசனை செய்க. நாம் ஒரு வடிவுடையவன் போன்று பிறருக்குக் காணப்பட்டாலும் உண்மையிலே சிவசொரூபமே- ஆதலின் நம்மைப் பாவித்தலினால் எல்லாப் பொருள்களோடுங் கலந்து அத்துவிதமாக விளங்குஞ் சிவசொரூபம் விளங்கித் தோன்றும்.



# பூதான்மப் பிரகரணம

(முத்திநிலை கூறிமுடித்து ஆன்மா எல்லாவற்றிலும் அதுவதுவாய் நிற்குமாற்றை இன்னும் விளங்கக் கூறுதும் என்றெடுத்துக்கொண்டு , அறுவகைப்படுத்து ஆறு பிரகரணங்களாற் கூறத்தொடங்கி, முதற்கண் பூதான்மப்பிரகரணங் கூறுகின்றார். அதில் பூத பரிணாமமாகிய உடம்பின் இயல்புகளும், ஆன்மா அவ்வுடம்பைப் பற்றியவழிப் பூதான்மாவென நிற்குமாறும் கூறப்படுகின்றது.)

1. ஆன்மாவொன்றே உபாதியோடு கூடியும் பிரிந்தும் ஆறு பேதப்படுதல்

பளிங்கின் நிறமானது தன்னிடத்துப் பொருந்திய வேறுவேறு பொருள்களின் தன்மையாய் விளங்குமாறுபோல ஓரான்மாவே சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதிமாயை முதற்காரணங்களாக அவற்றின் காரியங்களாய் விரிந்த உபாதிகளோடும்கூடி பூதான்மா, அந்தரான்மா, தத்துவான்மா, சீவான்மா, மந்திரான்மாவென ஐவகையாகவும், சிவபெருமானது திருவருளாலே மேற்கூறிய உபாதிகளின்றும் நீங்கிப் பரமான்மாவாகவும் விளங்கும்.

ஓரான்மாவே மாயாகாரியமாகிய சாத்துவிதம், இராசதம் தாமதம் என்னுங் குணங்களோடு கூடிப் பலவிதமாகி அக் குணங்களுக்குக்கேற்பச் செயல்களும் வேறுவேறாகித் தான் வேறு சிவன் வேறெனப் பேதமாய் நிற்பன். திருவருளினால் உண்டாகுஞ் சிவஞானத்தோடு கூடி நிற்குங் காலத்துச் சிவமே தானாக அபேதமாய் நிற்பன். ஓரான்மாவே மாயாகுணங்களோடு கூடிப் பேதமாயும் அவற்றின் நீங்கிச் சிவஞானத்தோடு கூடி அபேதமாயும் நிற்பன்.

2. ஆன்மா விடயங்களை அநுபவிக்கும் முறையும் முக்குணங்களின் பொது இலக்கணமும்

ஆன்மா பேதப் பொருளோடு கூடிப் பேதமாயும் அபேதப் பொருளோடு கூடி அபேதமாயும் நிற்றற்கு உரிமையுடையது.

இத்தகைய ஆன்மா ஒரு விடயத்தை அநுபவிக்கும் போது அவ்வான்ம அறிவு மனத்துடனும், மனம் இந்திரியத்துடனும், இந்திரியம் விடயபந்தத்துடனுங் கூடும். இவ்வாறு கூடியே ஒவ்வொரு விடய அநுபவத்தையும் ஆன்மா பெறும். சொல்லப்படுகின்ற சரீரந்தோறும் வேறுவேறு விதமாய் எக்காலத்தும் அதுவதுவாய் நின்று தொழிற்பட்டு விடயங்களை அநுபவிக்கும்.

மனம் மாயாகாரியமாகிய முக்குணங்களையுடையது. அம்முக்குணங்களுள்ளும் ஒவ்வொரு குணமே மேம்பட்டு நிகழும். ஆதலால் உயிரறிவு மனத்துடன் கூடியபொழுது ஒவ்வொருகுணம் மேம்பட்டு விளங்கும்.

செய்யத்தக்கது இது, செய்யத்தகாதது இது என அறிதல் சாத்துவித குணத்தின் செயலாகும். உயிரறிவு சாத்துவித குணத்தோடு கூடித் தொழிற்படுங்காலத்து அது ஞானத்தை விளங்கச் செய்யும். அறிந்தவற்றில் விருப்பு வைத்து முயற்சித்தல் இராசதகுணத்தின் செயலாகும். உயிரறிவு இராட்சதகுணத்தோடு கூடித் தொழிற்படின் அது விடயங்களில் இச்சையை உண்டாக்கும். முயற்சியால் உண்டாகும் சுகத்துக்கங்களை வினைப்பயன் என்றறியாது அவற்றிற்கட்டுண்டு மயங்குதல் தாமத குணத்தின் செயலாகும். உயிரறிவு மந்தம் பொருந்திய தாமத குணத்தோடு கூடித் தொழிற்படின் அது அறியாமையை உண்டாக்கும்.

### 3. முக்குணச் சிறப்பிலக்கணமும் சாத்துவித குண விருத்தியும்

சாத்துவித குணத்தால் உண்டாகும் அறிவினால் அனைத்துயிர்களிடத்தும் தயையும், நல்லன என்றறிந்தவற்றில் உறுதிப்பாடும், செய்யவேண்டுவன இவை செய்ய வேண்டாதன இவை என ஆராயும் நல்ல விநயமும், சுகத்துக்ககளுள் அமிழ்ந்தாத தைரியமும், பிறஉயிர்களுக்குத் தீங்குபயவாத



சத்தியமும் உளவாம்; இராசதகுணத்தால் உண்டாகும் விடய இச்சையால் பொருந்துகின்ற பாவச்செயல்களுக்கு அஞ்சாமையும், ஆரவாரமான இடம்பமும், கோபங்களும் உளவாம்; தாமத குணத்தால் உண்டாகும் மயக்கத்தால் பொய்ம்மையும், அறியாமையும், தன்னை மதித்து இறுமாக்கும் வெறியும், சோம்பலும் உளவாம்.

இம் முக்குணங்களின் செயல்களை ஆராய்ந்து இராசதகுணங்களோடு கூடித்தொழிற்படுதலின்றிச் சாத்துவித குணத்துடன் கூடி அக்குணம் மிகும்படி ஒழுகின் அறம் பொருள் இன்பம் வீடு என்னும் உறுதிப்பொருள் நான்கும் உளவாம்.

### 4. சாத்துவிதகுணமே முத்திக்கு நிமித்தம் – பூதான்மாவாக நிற்கும் முறைமை

முக்குணங்களுள்ளே தாமத குணம் மேற்பட்டு மற்றைய குணங்கள் கீழ்ப்படினும், இராசதகுணம் மேற்பட்டு மற்றைய குணங்கள் கீழ்ப்படினும் ஆன்மா அளவில்லாத காலம் துன்பத்தைச் செய்கின்ற சமுசார பந்தத்திற்கட்டுப்பட்டு இறந்து பிறந்து திரிவன். ஆதலால் இராசத தாமத குணங்கள் கீழ்ப்பட சொல்லப்பட்ட சாத்துவித குணம் மேற்பட்டிருக்குமாயின் அதுவே முத்தியைச் செய்விப்பதாகும்.

உயிர் பூதகாரியமாகிய உடம்போடு கூடி அவ்வுடம்பே தானாக நிற்குங் காலத்துப் பூதான்மாவெனப் பெயர்பெறும். உலகாயதன் தேகமே ஆன்மாவென வாதிப்பான். உலகத்திலே கண்ணினாற் காணப்படும் பொருள்களேயன்றி வேறுபொருள் இல்லையென்றும், உலகத்துக் காணப்படும் பொருள்களால் உண்டாகும் இன்பமே பேரின்பமென்றுங் கருதுவான். இதுவே உலகாயத மதக் கொள்கையென அறிக.

# அந்தரான்மப் பிரகரணம்

### 1. அந்தரான்மாவாய் நிற்கும் முறைமை

அனைத்துயிர்களும் விடயங்களை அறிதலுக்குக் காரணமாயிருப்பது வாக்காகும். இது நாதமெனவும்படும். நாதமயமாகிய வாக்கு சரீரத்தின் அகத்தே இருக்கும். நாதத்தின் தொழிலால் தெய்வமொழியும், அத்தெய்வமொழியினாற் சகல சாத்திரங்களும் உண்டாகும். நாதத்தாலேயே எல்லா உயிர்களுந் தொழிற்படும்.

வாக்கானது சூக்குமை, பைசாந்தி, மத்திமை, வைகரி என நான்கு வாகைப்படும். அவற்றுள், சூக்குமை வாக்கு சரீரத்தின் அகத்தே நாதமாத்திரையாய் இயங்கிக் கொண்டிருக்கும். பைசந்தி வாக்கில் அக்கரங்கள் அகத்தே நிருவிகற்மாய்த் தோன்றும். மத்திமை வாக்கில் அக்கரங்கள் அகத்தே தோன்றும். மாத்திமை வாக்கில் அக்கரங்கள் அகத்தே பிரிந்து தோன்றும். வைகரி வாக்கு தன்செவிக்கும் பிறர் செவிக்கும் கேட்கப்படுவதாய்ச் சொல்லும் சொல்லாகும்.

சூக்குமை, பைசந்தி என்னும் இரண்டு வாக்கிலும் வாயுக்களின் தொழிற்பாடு கிடையாது. ஆதலால் அவ்விரண்டிலும் சொற்களின் தொழிற்பாடில்லை. மத்திமை வாக்கு வைகரிவாக்கு ஆகிய இரண்டிலும் வாயுக்களின் தொழிற்பாடு உண்டு. மத்திமை வாக்கு உதானவாயுவின் தொழிற்பாட்டோடு கூடியது. வைகரி வாக்கு பிராணவாயுவின் தொழிற்பாட்டோடு கூடியது. சொற்களின் தொழில் மத்திமை வாக்கிலே சூக்குமமாயும் வைகரிவாக்கிலே தூலமாயும் நிகழும். உயிரானது அகத்தேயிருக்கும் நாதமயமாகிய நால்வகை வாக்குகளுடன் கூடி நிற்குங் காலத்து அந்தரான்மாவெனப்படும்.



# தத்துவான்மப் பிரகரணம்

### 1. தத்துவான்மாவாய் நிற்கும் முறைமை

ஓசை ஊறு ஒளி சுவை நாற்றம் என்னும் ஐந்தும் தன்மாத்திரையெனவும் விடயமெனவும் இருவகைப்படும். அவற்றுள் விடயம் ஆகாயம் காற்று தீ நீர் மண் என்னும் ஐம்பூதங்களின் குணமாக அவற்றைப் பற்றிநிற்பது. தன்மாத்திரை குணிப்பொருளைப் பற்றுக்கோடாகச் சாராது குண சமூகமாய் நிற்பது. அறிவே ஆன்மாவுக்குக் குணமாயும் சொரூபமாயும் நிற்பதுப்போலத் தன்மாத்திரை தானே குணமாயுங் குணியாயும் நிற்கும்.

இத் தன்மாத்திரை ஐந்தும் மனம் அகங்காரம் புத்தி மூன்றும் ஆக எட்டும் புரியட்டக உடம்பாம். சூக்கும உடம்பு என்பதும் இதுவே. இவ்வெட்டுத் தத்துவங்களுள் ஏனைய தத்துவங்களும் அடங்கும். தன்மாத்திரையுள் அவற்றின் காரியமாகிய பூதமைந்தும், அப்பூதங்களைப் பற்றுக்கோடாகக் கொண்டு தொழிற்படும் ஞானேந்திரியமைந்தும், கன்மேந்திரியமைந்தும் அடங்கும். மனம் புத்தி அகங்காரங் கூறவே இனமாகிய சித்தமும் அடங்கும். இவ்வான்மதத்துவந் தொழிற்படுதற்குத் துணையாயிருக்கும் வித்தியாதத்துவமும், தொழிற்படுத்துஞ் சிவதத்துவமும் அடங்கும்.

ஆன்மதத்துவம் இருபத்துநான்கு, அவை யாவன: தன்மாத்திரை (யாகிய சுவை ஒளி ஊறு ஓசை நாற்றம்) ஐந்தும், பூதங்கள் ஆகிய (மெய் வாய் கண் மூக்கு செவி) ஐந்தும், கண்மேந்திரியங்கள் ஆகிய (கால், கை வாக்கு எருவாய் கருவாய்) ஐந்தும், அந்தக் கரணங்கள் ஆகிய (மனம் புத்தி சித்தம் அகங்காரம்) நான்குமாம்.

வித்தியாதத்துவம் ஏழு. அவை"யாவன காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்பனவாம்.

சிவதத்துவம் ஐந்து. அவையாவன சுத்தவித்தை, ஈசுரம், சாதாக்கியம், சத்தி, சிவம் என்பனவாம்.

உயிர் முப்பத்தாறு தத்துவங்களுடனுங்கூடித் தொழிற்படும் நிலையிலே தத்துவான்மா எனப்படும்.

## 2. தத்துவ முதற்காரண காரியங்களும் சுத்தமாயா காரியங்களும்

தத்துவங்கள் பாசமென்றும் மலம் என்றும் சொல்லப்படும். பாசம் என்னுஞ் சொல்லுக்குக் கட்டுப்படுத்துவது என்பது பொருள். தத்துவங்கள் சரீரரூபமாயிருந்து உடம்பே தானென்னும்படி உயிரைக் கட்டுப்படுத்தித் தன்வசமாக்குதலில் வைத்துப் பாசம் என்பதன் பொருளை உணரலாம். மலம் என்பதற்கு அறியாமையைச் செய்வது என்பது பொருள். இதனைத் தான் அல்லாத உடம்பைத் தான் என மயங்கி உணரச் செய்தலின் வைத்து உணரலாம்.

உயிருடன் இயல்பாகவே கூடிநிற்கும் ஆணவமலத்தை நீக்குதற் பொருட்டு அநாதி கேவலத்தில் நின்றும் பிரிக்கும் பொழுதே தத்துவங்கள் முதல்வனாலே தரப்பட்டன. ஆதலினால் இத்தத்துவங்கள் ஓரறிவு முதல் ஐயறிவு ஈறாகிய சகல உயிர்களுடனும் இயல்பாயிருக்கும்; சகல உலகங்களும், தத்துவங்களும் தத்துவமயமாய் இருத்தலால் உயிர்களிடத்து இத்தத்துவங்களே சகல உலகங்களாயுமிருக்கும்; காரிய ரூபமாய் விரிந்தும் காரண ரூபமாய் ஒடுங்கியும் வரும் உள்பொருளாகிய தத்துவங்கள் சகல ஆன்மாக்களிடத்தும் நித்தியமாயும் இருக்கும்.

ஓரறிவுயிர் முதல் ஐயறிவுயிர் ஈறாக அனைத்துயிர்களிடத்தும் முப்பத்தாறு தத்துவங்களெனப்படுஞ் சூக்கும சரீரமிருப்பினும் அது தொழிற்படுதற்குத் துணையாகிய தூலசரீரத்திற்கேற்றவாறே தொழிற்படும். கண்ணிடத்துக் காணுந்தன்மையிருப்பினும் அது விளக்கொளி முதலிய துணையொளிகளுடன் கூடினாலன்றிக் காணப்படமாட்டாது; அவ்வொளிகளுடன் கூடிக்காணுங்காலத்தும் அவ்வொளி சிறிய அளவினதாயின் காணுந்தொழில் சிறிய அளவினதாயும், பூரணமாயின் காணுந்தொழில் பூரணமாயும் நிகழும். துணையாகும் ஒளி சிறிதுமின்றி இருளோடு கூடின் அவ்விருளைக் காணுதலன்றிப் பொருளைக் காணமாட்டாது. இவ்வாறே அனைத்துயிர்களிடத்தும் இத்தத்துவங்கள் இருந்தாலும், மக்கள் தேவர் அல்லாத மற்றைய உயிர்களிடத்து அவற்றின்



தூல சரீரத்திற்கேற்றவாறு தொழிற்படும்.

இந்தத் தத்துவங்கள் காரணம் (பிராகிருதம்) என்றும், காரியம் (பிரக்கிரியை) என்றும் இருவகைப்படும். இவ்விருவகையுள் பிராகிருதம் என்பது தொழிற்படுவதற்குத் தகுதியாயிருக்கும் முதற்காரணம்; பிரக்கிரியை என்பது ஆக்கப்படுவதாகிய காரியம். சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதிமாயை மூன்றும் பிரகிருதம். சுத்தமாயையினால் ஆக்கப்படுவதும், அசுத்தமாயையினால் ஆக்கப்படுவதும், பிரகிருதி மாயையினால் ஆக்கப்பவதும் ஆகிய மூவகையும் காரியமாம். இவற்றுள் சிவதத்துவம் ஐந்தும், தாத்துவிகங்களுள் வைத்து எண்ணப்படுவதாகிய வாக்கு நான்கும் சுத்தமாயையின் சம்பந்தமான காரியங்களாகும்.

## 3. அசுத்த மாயை பிரகிருதி மாயையின் காரியமும் தத்துவஞானமும்.

வித்தியாதத்துவங்கள் காலம், நியதி, கலை, வித்தை, அராகம், புருடன், மாயை என்னும் ஏழுமாம். இவற்றுள் கலை உயிருக்கு அறியாமையைச் சிறிது நீக்கிக் கிரியாசத்தியைச் சிறிது விளக்குவது. வித்தை, அறிவைச் சிறிது விளக்குவது. அராகம் இச்சையைச் சிறிது எழுப்புவது. இம்மூன்றும் உயிரின் குணமாகிய கிரியாசத்தி ஞானாசத்தி இச்சாசத்திகளைத் தொழிற்படுத்து தற்கண் காலமும் நியதியும் அவசியமானவை. அவை நிச்சயமாக வேண்டப்படும். படவே, இவ்வைந்துடன் கூடித்தொழிற்படும் உயிரின் எழுச்சி புருடன் எனப்பெயர் பெறும். இந்த ஆறும் இவை தோன்றுவதற்கிடமான மாயையுடன் சேர வித்தியாதத்துவம் ஏழாயிற்று. இத்தத்துவங்கள் உயிருக்குப் போகத்தைத் தோற்றுவிப்பன. வித்தியாதத்துவம் ஏழும் சிவசத்தியின் தொழிலால் அசுத்த மாயையினிடத்துத் தோன்றிய (பிரக்கிரியை எனப்படும்) காரியங்களாகும். அசுத்த மாயையின் காரியமான வித்தியா தத்துவங்கள் ஏழும் அசுத்தமாயா பிரக்கிரியை எனப்படும். ஆன்ம

தத்துவம் இருபத்துநான்கும் கலந்து நிற்கின்ற பிரகிருதி மாயையின் (பிரக்கிரியை எனப்படுந்) காரியங்களாம்.

சுத்தமாயையின் காரியம் படம் குடிலானாற்போல (படங்கு கூடாரமானாற்போல) விருத்தியாகும். அசுத்தமாயையின் காரியம் நெய்யிற் புழுப்போல ஏகதேச பரிணாமமாம். பிரகிருதி மாயையின் காரியம் பால் தயிரானாற் போல முற்றும் பரிணாமமாம். சுத்தமாயை அசுத்தமாயை பிரகிருதிமாயை மூன்றும் பிராக்கிருதம் எனப்படும் முதற்காரணங்களாம். பிரகிருதி (காரணமான பிராகிருதமாயினும்) கலையின் காரியமாதலின் பிராகிருதம் எனப்படும்.

பிராகிருதம் பிரக்கிரியை எனும் இரண்டினுள் பிரக்கிரியை எனப்படும் தத்துவங்களின் உண்மைத் தன்மையை அறிதலே தத்துவஞானமாகும். திருவருளினாலே சிவஞானந் தோன்றும். தத்துவங்களின் உண்மைத் தன்மையை அறிதலாவது, பிருதிவி முதல் நாதம் ஈறாகிய முப்பத்தாறு தத்துவங்களையும் மூவித மாயைகளின் காரியம் எனவும், அம்மாயைகள் சடமாதலின் அவற்றின் காரியங்களுஞ் சடமேயாமெனவும், சடமாயினும் அறிவுருபமாகிய உயிரோடு அவ்வுயிரின் அறிதற்றொழிலுக்குக் கருவியாய் நிற்றலால் அறிவுடையன போலக் காணப்படும் (சித்சங்கசித்து) எனவும், உண்மையில் அறிவில்லாதனவாய்த் தன்னின் வேறாயுள்ளனவெனவும், தன்னால் அறியப்படும் உலகப்பொருள்கள்போல இவையும் தன்னாலறியப்படுவனவேயாம் எனவும் தன் அறிவின் இடத்தில் விளங்கக் காணுதல். இதுவே தசகாரியத்துள் தத்துவ தரிசனம் எனப்படும்.

"மண்முதற் சிவமதீறாய் மலஞ்சட மென்றல் காட்சி"

(என்பது உண்மைநெறி விளக்கம்)

அக்கினி ஏதேனுமொன்றைப் பற்றி நிற்பதன்றித் தனித்து நில்லாது. அது போல உயிரும் யாதேனும் ஒன்றைப் பற்றி அதுவாய் நிற்பதன்றித் தனித்து நிற்பதில்லை. உயிர் தத்துவங்களுடன் கூடி அவையே தானென நிற்கும். அவ்வாறு நின்றவுயிர் அத்தத்துவங்களின் உண்மைத் தன்மையையறிந்து அத்தத்துவங்களை விட்டு நீங்கும். நீங்கித் தன்னோடு என்றும் பிரிப்பின்றி நிற்குஞ் சிவபெருமானைச் சார்ந்து சிவமேயாய் நிற்கும். தத்துவங்களினின்றும் நீங்கிச் சிவமேயாய் நிற்கச் செய்யும் தத்துவஞானத்தை ஒத்தஞானம் பிறிதொன்றுமில்லை.



## 4. தத்துவ ஞானத்தின் பெருமை.

சிவபெருமானுக்கும், ஆன்மாவுக்கும், கடவுளருக்கும் வியாபகமுண்டு. சிவபெருமான், எவ்விடத்தும் எல்லாப் பொருள்களோடும் வியாபித்துள்ளார். ஆன்மா, சார்ந்ததன் வண்ணமாகும் வியாபகமுடையது. பிரமா விஷ்ணு முதலிய கடவுளரும் ஆன்மவர்க்கத்தினரேயாதலின் அவர் வியாபகமும் அவரவரால் வியாபிக்கப்படும் உலக அளவேயாம். ஆதலால் நித்தப்பொருளாகிய சிவபெருமானுடைய வியாபகத்தையொத்த வியாபகம் வேறு கிடையாது.

சித்தத்தைச் சிவன்பால் வைத்தார் இடையறாது கசிந்து உருகுவர். அவருக்கே சிவபெருமான் விளங்கித் தோன்றுவார். சிவபெருமான் விளங்கித் தோன்றுதலே சித்திகள் பலவற்றுள்ளும் மேலான சித்தியாகும். சிவபெருமான் விளங்கித் தோன்றும் இந்தச் சித்தியே சிவஞானமென்றும் சிவயோகமென்றுங் கூறப்படும். சிவனோடு ஆன்மா பிரிப்பின்றி நிற்றலை அநுபவமாய் உணருஞ் சிவயோகம்போலச் சித்திகள் வேறொன்றுமில்லை.

அச்சிவயோகம் நிலைபெறவேண்டுமாயின் உடல் சம்பந்தமான சுகதுக்கங்களின் பற்றைத் துறத்தல் வேண்டும். அங்ஙனம் பற்றுவிடுதலாகிய துறவே பொறுமை எனப்படும். பொறுமைகள் பலவற்றுள்ளும் இப்பொறுமையே மேலானது. இவ்வித பொறுமை உடையானுக்குச் சிவயோகந் தானே உண்டாகி நிலைபெறும். சிவயோகத்தை நிலைபெறச்செய்யும் மேலான பொறுமைக்கு ஒப்பாக வேறொன்றுமில்லை.

சிவனோடு ஆன்மா பிரிப்பின்றி நிற்றலை அநுபவ மாயுணர்ந்தாருக்கே பிறப்பு வீடுகளையும் அவற்றின் காரணங்களையும், விபரீத ஐயங்களாலன்றி உண்மையானுணர்தல் முடியும். ஆதலால் சிவஞானம் விளங்கப்பெற்றாருக்கே தத்துவஞானங் கைகூடும்.

சிவபெருமானுடைய வியாபகத்தையொத்த வியாபகமில்லை. சிவயோகத்தைப் போன்ற சித்திகளில்லை. துறவாகிய பொறுமைக்கு ஒப்பாக வேறொன்றில்லை. அவற்றைப் போல இந்தத் தத்துவ ஞானத்திற்குச் சமமான ஞானம் இல்லை.

## 5. தத்துவங்களுடன் கூடி ஆன்மா நிற்கும் முறைமை.

ஆன்மாவின் நிலை கேவலம், சகலம், சுத்தம் என மூவகைப்படும். அம்மூன்றுங் காரணமெனவும் காரியம் எனவுந் தனித்தனி இருவகைப்படும். படவே, காரணகேவலம், காரணசகலம், காரணசுத்தம் எனவும், காரியகேவலம், காரியசகலம், காரியசுத்தம் எனவும் ஆன்மா நிற்கும் நிலை ஆறு வகைப்படும். அவற்றுள், காரணகேவலமாவது, அநாதியில் ஆணவமலத்துடன் கூடிநிற்கும் நிலை. காரணசகலமாவது, மாயையின் காரியமான கருவிகளுடன் கூடிப் பிறந்திறந்து உழலும் நிலை. காரணசுத்தமாவது, கருவிகள் அனைத்தும் நீங்கச் சிவபெருமானது திருவருளோடு பிரிப்பின்றி நிற்கும் நிலை. காரியகேவலமாவது, சாக்கிரம், சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீதம் என ஐவகைப்படும்.

அவற்றுள் சாக்கிரமாவது எல்லாக் கருவிகளுடனுங் கூடித் தொழிற்பட்ட இளைப்பு நீங்குதற் பொருட்டு நித்திரைக்குச் சென்று நித்திரை வராமல் விழித்திருக்கும் நிலை. இந்த நிலையில் இலாடத்தின் நிற்கும் கருவி ஞானேந்திரியம் ஐந்து, கன்மேந்திரியம் ஐந்து, சத்தாதிவிடயம் ஐந்து, வசனாதிவிடயம் ஐந்து, மனமாதி அந்தக்கரணம் நான்கு, பிராணாதிவாயு பத்து, புருடன் ஒன்று ஆக முப்பத்தைந்து. சொப்பனத்தானமாகிய கண்டத்தானத்தில் நிற்குங் கருவி, சத்தாதி விடயம் ஐந்து, வசனாதி விடயம் ஐந்து, அந்தக்கரணம் நான்கு, பிரணாதீவாயு பத்து, புருடன் ஒன்று, ஆக இருபத்தைந்து. சுழுத்தித் தானமாகிய இருதயத்தில் நிற்கும் கருவி பிராணன், சித்தன், புருடன் என்னும் மூன்று. துரியத்தானமாகிய நாபியிலே நிற்குங் கருவி பிராணன் புருடன் என்னும் இரண்டு. துரியாதீதத் தானமாகிய மூலாதாரத்திலே நிற்கும் கருவி புருடன் ஒன்று.

காரிய சகலமாவது, உயிர் எல்லாக்கருவிகளுடனுங் கூடி இலாடத் தானத்திலே நின்று விடயங்களினிடமாகத் தொழிற்படும் நிலை. இதனினும் சாக்கிரம் முதலிய ஐந்து அவத்தை உண்டு. அவை வருமாறு:-

சுகதுக்கங்களைக் கேட்ட மாத்திரையில் திடுக்கிட்டுப் பிராணவாயு சீவியாமல் மூர்ச்சித்து மயங்கி நிற்றல் துரியாதீதம்.



சுகதுக்கம் தோன்றாது பெருமூச்செறிந்து நிற்றல் துரியம் சுகதுக்கத்திலே மூழ்கிநிற்றல் சுழுத்தி. சுகதுக்கம் வந்தவரலாற்றை ஆராய்ந்து மனத்தொழிற்பாடு செய்து நிற்றல் சொப்பனம். சுகதுக்கங்களை அநுபவித்தல் சாக்கிரம். இவற்றிற்குந் தத்துவங்கள் மேற்கூறியவாறேயாம்.

காரிய சுத்தமாவது, இருதயம், கண்டம், நாக்கின் அடி, இலாடம், பிரமரந்திரம் என்னும் ஐந்து தானங்களிலே நின்று அப்பியாசம் செய்யும் யோகநிலை. இவை முறையே சாக்கிரம் முதலாக எண்ணப்படும். இவற்றிலே தொழிற்படுங் கருவிகள் பிராணன், மனம், புருடன் என்னும் மூன்றுமேயாம். இருதயத்தில் இம்மூன்றுந் தூலமாய்த் தொழிற்படும். கண்டத்தில் பிராணவாயு சூக்குமமாயும் ஏனைய இரண்டும் தூலமாயுந் தொழிற்படும். நாக்கின் அடியில் மனமும் புருடனும் தொழிற்படும். இலாடத்தில் மனம் சூக்குமமாயும் புருடன் தூலமாயுந் தொழிற்படும். பிரமரந்திரத்தில் புருடன் மாத்திரம் தொழிற்படும்.

ஆன்மா காரிய சகல சாக்கிரத்தில் எல்லாத் தத்துவங்களுடனும் கூடித் தொழிற்படும். காரிய சகல சொப்பனம், சுழுத்தி, துரியம், துரியாதீத காரியகேவல காரியசுத்த என்பவற்றில் தத்துவங்களுடன் கூடிப் பிரியும்.

ஆன்மா எப்பொழுதும் யாதேனும் ஒரு தத்துவத்துடன் பிரிப்பின்றிக் கூடி நிற்றலும், அத்தத்துவத்தை விட்டுப் பிரிந்து பிறிதொரு தத்துவத்துடன் அவ்வாறே கூடுதலுமாகக் காணப்படும். ஆன்மா எப்பொருளையுஞ் சார்ந்து அப்பொருள் அளவில் வியாபகமாய் இருக்கும். சார்ந்ததன் வண்ணமாய் வியாபித்தலே ஆன்மாவின் வியாபகம். ஆதலின் தத்துவங்களைக் கூடிப் பிரிதலால் அவ்வான்ம வியாபகத்திற்கு இழுக்கில்லை.

ஆன்மா கூடிப்பிரிதலினாலே தத்துவங்களுக்குத் தோற்றமும் ஒடுக்கமும் உளவாம். எந்தத் தத்துவத்துடன் கூடி ஆன்மா சீவிக்குமோ அப்பொழுது அந்தத் தத்துவம் தோற்றமுடையதாகும். எந்தத் தத்துவத்தினின்றும் ஆன்மா நீங்குமோ அப்பொழுது அந்தத் தத்துவம் ஒடுக்கமுடையதாகும்.

௬. தத்துவத்திலிருந்து நீங்கிச் சிவனோடு கலத்தல் முத்தி

தத்துவங்களுள் யாதேனுமொரு தத்துவத்தை உயிர்பற்றி நிற்குங்காலத்து ஏனைத் தத்துவங்களைப் பற்றமுடியாது. எந்தத் தத்துவம் பற்றுக்கோடாக உயிர் சீவிக்குமோ அந்தத் தத்துவத்திற்குரிய விடயத்திலே தொழிற்பாடுடையதாயிருக்கும். உயிர் கண் இத்திரியத்தைப் பற்றி நிற்குங் காலத்துச் செவி முதலியவற்றைப் பற்றி நிற்பதில்லை. அவ்வாறு கண் இந்திரியத்தைப் பற்றி நிற்குங் காலத்தும் அவ்விந்திரியத்திற்குரிய விடயமாகிய உருவத்தை அறிதலேயன்றிப் பிறவிடயங்களை அறிதலில்லை.

தத்துவம் அனைத்துந் தோற்றமும் ஒடுக்கமுமுடையனவாதலின் அநித்தியமென்றும், கருவியாதலின் தானல்லவென்றும் தன் அறிவின் கண்ணே தத்துவத்தின் உண்மைத் தன்மையையுணர்ந்து, நிலைப்பெறுதல் இல்லாத அத்தத்துவத்தினின்றும் நீங்கும். நீங்கவே தனு, கரண, புவன, போகம் என்னும் நான்கினுள் கரணமெனப்படுமிந்தத் தத்துவங்களின் வேறான ஏனைய மூன்றனிடத்துமுள்ள வாசனை அறவே நீங்கும். வாசனை நீங்கவே நித்தியமாயும் நிர்க்குணமாயும் விளங்கும் பரமசிவனிடத்தில் ஒற்றுமைப்பட்ட சித்தமுடையவனாயிருப்பன். தத்துவத்தில் அநித்தியத்தையுணர்ந்து நீங்குதலாகிய இதுவே தசகாரியத்தில் தத்துவசுத்தி எனப்படுவதாகும். சிவப்பெருமானிடத்து இடையறாது கலந்து நிற்றலினாலே இத்தத்துவசுத்தி உண்டாகும். (இக்கருத்துப் பற்றியே

"மண்முதற் சிவமதீறாய் வையத்திற் றானிலாது
கண்ணுத லருளால் நீங்கல் சுத்தமாய்க் கருதலாமே"

என உண்மைநெறி விளக்கத்திலும் உரைக்கப்பட்டது.)

இவ்வாறு சிவனோடு கலந்து நிற்பினும் பிராரத்த தேகமுள்ளளவும் சீவன் முத்தன் எனப்பட்டு அப்பிராரத்த தேகம் நீங்கிய பொழுது பரமுத்தியினை அடைவான். திரும்பப் பிறவியாகிய மயக்கத்திற் பொருந்தான்.



# சீவான்மப் பிரகரணம்.

மண், புனல், அனல், காற்று, வெளி என்னும் ஐந்தும் பூதங்களாகும்; விளங்குகின்ற காது, உடல், கண், நாக்கு, மூக்கு என்னும் ஐந்தும் ஞானேந்திரியங்களாகும்; பொருந்திய சத்தம், பரிசம், ரூபம் இரசம், கந்தம் என்னும் ஐந்தும் தன்மாத்திரைகளாகும்; வாய், கால், கை, குதம், குறி என்னும் ஐந்தும் கன்மேந்திரியங்களாகும். இவற்றோடும் மயக்கம் நிறைந்த மனம் புத்தி அகங்காரங்களோடும், இத்தத்துவங்களுக்கு முதற்காரணமெனச் சிந்திப்பதாய பிரகிருதியோடும், சாத்துவித இராசத தாமதம் என்னுங் குணங்களோடுங் கூடிப் புருடதத்துவமாய் நின்று தனு கரன புவன போகங்களிடமாக வருஞ் சுகதுக்க பலன்களை அநுபவிக்கும் காலத்து உயிர் சீவான்மா எனப்படும்.

இச்சீவான்மாவின் மறுபெயர்களாவன: சருவகெதன், கபாலி, சூக்குமன், பழையோன், துருவன், சாசுவதன், வியாபி, அவ்வியத்தன், பெத்தன், சருவதத்துவ வியாபி, அநித்திய சமுசாரி, சனாதனன், சுதந்திரவீனன், கிஞ்சிக்ஞன், மலதூடிதன், சம்மூடன், க்ஷேத்திரக்ஞன், அநீஸ்வரன், அக்கிரியன், புற்கவி, புருடன், ஆன்மா, செந்து, புமான், சின்மாத்திரன், சொல்லப்பட்ட இவையேயன்றிப் பசுத்தன்மையினையுடைய ஆன்மாவின் நாமங்கள் இன்னும் பலவுள.

சருவகெதன்-சரீரம் முழுவதும் வியாபித்திருப்பவன். கபாலி-(சரீரத்தினுள்ளும்) கபாலத்தை அத்தாணிமண்டபமாகவுடையவன். சூக்குமன்-இந்திரியங்களால் அறியப்படாதவன். பழையோன்-அநாதியாயுள்ளவன். துருவன்-நித்தியன். சாசுவதன்-பரம்பரையாக

வருபவன். வியாபி-வியாபகத்தையுடையவன். அவ்வியத்தன்-யாதேனுமொன்றைச் சார்ந்து விளங்குபவன். பெத்தன்-ஆணவத்தாலே தடையுண்டவன். சருவதத்துவ வியாபி-மாயா காரியமாகிய எல்லாத் தத்துவங்களினும் வியாபித்தலையுடையவன். அநித்திய சமுசாரி-முத்திவரை பாசப்பற்றுடையவன். சனாதனன்-அழியாதவன். சுதந்திரவீனன்-சுதந்திரங் குறைந்தவன். கிஞ்சிக்ஞன்-சிற்றறிவுடையவன். மலதூடிதன்-மலத்தால் கட்டுப்படுத்தப்பட்டவன். சம்மூடன்-நன்றாக மூடப்பட்டவன். கேத்திரக்ஞன்-சரீரத்தைப் பெற்று அறியும் தன்மையுடையவன். அநீஸ்வரன்-தலைமைத்தன்மையில்லாதவன். அக்கிரியன்-செய்விக்கச் செய்யுந் திறமுடையவன். புற்கவி-தேகத்தோடு கூடி நிற்பவன். செந்து-பிறப்பினையுடையவன். புமான்-ஆற்றலுடையவன். சின்மாத்திரன்-ஞானமே வடிவானவன்.

ஆன்மா என்பது, சீவான்மா பரமான்மா என்னும் இரண்டற்கும் பொதுச் சொல்லாயினும் அடை அடுக்காது ஆன்மா என்னும் இடத்து அச் சொல் சீவான்மாவையே குறிக்கும்.



# மந்திரான்மப் பிரகரணம்.

## 1. மந்திரங்களின் பெருமை.

மந்திரம் என்னுஞ் சொல்லுக்கு நினைப்பவனைக் காப்பது என்பது பொருளாகும். (மந்-நினைப்பவன், திர-காப்பது.) ஆதலால் மந்திரங்கள் உயிர்களுக்கு வரும் பல துன்பங்களையும் போக்கும்; அழகிய தெய்வத்தன்மையைத் தரும்; பாவத்தைக் கெடுக்கும். பெருமை வாய்ந்த மந்திரங்கள் அனைத்தும் என்றும் அழியா நித்தியமானவை. தாவரம் எனப்படும் நிலையியற் பொருளும், சங்கமம் எனப்படும் இயங்கியற் பொருளுமாகிய யாவும் மந்திரமின்றியிரா. அவை மந்திரங்களால் அதிட்டிக்கப்பட்டு விளங்கும்.

தேவர், அசுரர், இயக்கர், இராக்கதர், கின்னரர், கந்தருவர், பாம்பு, முதலிய உயிர்வருக்கம், பிதிர் மாதர்கள், மனிதர், சித்தர், வித்தியாதரர், பைசாசர் ஆகிய சகல உயிர்களிடத்தும் மந்திர சொரூபம் இருக்கும்; மாயா காரியமாகிய பிருதிவி முதல் நாதம் ஈறாகிய தத்துவ மனைத்திலும் அம்மந்திர சொரூபம் இருக்கும்.

உயிர்கள் அனைத்திற்கும் ஆதிபௌதிகம், ஆதிதைவிகம், ஆதி ஆன்மீகம் என மூன்று நிலைக்களங்கள் உண்டு. அவற்றுள், ஆதிபௌதிகமாவது பூதகாரியமான உடல். ஆதிதைவிகமாவது உயிரை யதிட்டித்து நிற்குந் தெய்வசம்பந்தமான மந்திர சொரூபம். ஆதி ஆன்மீகமாவது அம்மந்திரத்தை அதிட்டித்து நிற்குஞ் சிவசத்தி.

ஆதிபௌதிகம் முதலிய மூன்றும் உயிர்களுக்கு வினைப்பயனை அநுபவிக்கச் செய்யும் முறையில் வாயில்களாகவும் விளங்கும். அவ்வாறு விளங்குங்கால் ஆதி பௌதீகம் மின்னல் இடி முதலியனவாயும், ஆதி தைவிகம்

நரை, திரை மூப்புப் பிணி முதலியனவாயும், ஆதி ஆன்மீகம் திருடர் பாம்பு முதலிய உயிர்வர்க்கங்களாயும் வரும். எனவே உயிர்களுக்கு நிலைக்களங்களும், வினைப்போக வாயில்களும் வெவ்வேறானவை. இவற்றைச் சொல் ஒற்றுமை கொண்டு மயங்கற்க.

**2. வாசக, பீசமந்திரங்களும் அவற்றின் பேதங்களும்.**

மந்திரம் என்னும் பெயர் நினைப்பவனைக் காக்குமியல்புடைய வாச்சியமாகிய சிவத்துக்குஞ் சிவசக்திக்குமே செல்லும். ஆயினும் வாச்சியத்திற்கும் வாசகத்திற்கும் பேதமில்லாமை பற்றி, உபசாரத்தால் வாசகத்திற்குஞ் செல்லும், இவ்வாற்றல் மந்திரம் வாச்சிய மந்திரம், வாசக மந்திரம் என இரு திறப்படும். தெய்வங்களிடத்து மந்திரங்கள் நேரே யதிட்டித்தலால் அத்தெய்வங்கள் வாச்சிய மந்திரமும், அக்கரங்கள் வாசக மந்திரமுமாகும்.

வாசக மந்திரங்களெல்லாம் பீசாக்கரத்தை முன்னாகக் கொண்டு உச்சரிக்கப்படும். அந்தப் பீசாக்கரம் உயிரெழுத்தை முன்னாகவும் விந்துவை இறுதியாகவுமுடையதாகும். (விந்து-அநுஸ்வாரம்). பீசாக்கரம் பலவேறு வகைப்படும். அதற்குக் காரணம் உயிர் எழுத்துக்களின் பேதமேயன்றி வேறில்லை.

தெய்வங்கள் மந்திரங்களாற் சிறப்பாக அதிட்டிக்கப்பட்டு விளங்கும். அவ்வாறு விளங்கும் தெய்வங்களுக்கு அங்க மந்திரங்களேயுரியன. அந்த அங்க மந்திரங்களின் பீசங்கள் அகர முதல் பதினான்கு வரையுள்ள தீர்க்கமான விகிருதி உயிரெழுத்துக்களையும் பதினாறாவது விகிருதி எழுத்தையும் முன்னாகவும், விந்துவை இறுதியாகவுங் கொண்டிருக்கும். அத்தெய்வங்களுக்கு அங்க மந்திரங்களே தத்துவ ரூபங்களாக இருத்தலால், அத்தெய்வங்களின் நாமங்களும் மந்திர ரூபமாகும்.



வாசக மந்திரங்கள் பிரமமந்திரம் எனவும், அங்க மந்திரமெனவும் இருவகைப்படும். ஈசானம், தற்புருடம், அகோரம், வாமதேவம், சத்தியோசாதம் என்னும் ஐந்தும் பிரமமந்திரமாகும். இவை பஞ்சப் பிரம மந்திரங்கள் எனவும்படும். இருதயம், சிரசு, சிகை, கவசம், நேத்திரம், அத்திரம் என்னும் ஆறும் அங்க மந்திரமாகும். இவை சடங்க மந்திரங்கள் எனவும் படும். பஞ்சப் பிரமமந்திரங்களும், சடங்க மந்திரங்களும் சங்கிதா மந்திரங்களாகும். இவ்விரண்டுந் தனித்தனி முப்பத்து மூன்று எழுத்துக்களையுடையன. பஞ்சப்பிரம மந்திரங்களில் எழுத்துக்கள் ஈசானம் ஆறு, தற்புருடம் ஏழு, அகோரம் ஆறு, வாமதேவம் ஏழு, சத்தியோசாதம் ஏழு, ஆக முப்பத்துமூன்றாகும்; சடங்க மந்திரங்களில் எழுத்துக்கள் இருதயம் ஆறு, சிரசு ஐந்து, சிகை ஐந்து, கவசம் ஆறு, நேத்திரம் ஏழு, அத்திரம் நான்கு ஆக முப்பத்து மூன்றாகும்.

சங்கிதா மந்திரங்கள் பீசமந்திரங்களுடன் கூடிவரும். அப்பீசமந்திரங்கள் அனைத்தும் விந்துவை இறுதியாககொண்டு விளங்கும். பஞ்சப்பிரமந்திரங்களுக்கு உயிர் எழுத்தில் பிரகிருதி அட்சரங்களாகிய (பதின்மூன்றாவது ஒ, பதினொன்றாவது ஏ, ஐந்தாவது உ, மூன்றாவது இ, முதலாவது அ, என்னும்) ஐந்தும் பீசங்களாகும். அங்க மந்திரங்களுக்கு விகிருதி அட்சரங்களாகிய (இரண்டாவது ஆ, நான்காவது ஈ, பன்னிரண்டாவது ஐ, பதின்நான்காவது ஔ, ஆறாவது ஊ, பதினாறாவது அ‌ஃ, என்னும்) ஆறும் பீசங்களாகும்.

சங்கிதா மந்திரமாகிய அங்கமந்திரத்தில், இருதயம், சிரசு, சிகை, கவசம் என்னும் நான்கும் தீர்க்க பீசத்தையுடையன. ஏனைய நேத்திரம் அத்திரமிரண்டும் விந்துவோடுகூடிய பீசத்தையுடையன. இவ்விரண்டினுள்ளும் அத்திரபீசம் விசர்க்கத்தை அங்கமாகவுடையது. (விசர்க்கம் - ஒன்றன்மேல் ஒன்றாய், இரட்டைப்புள்ளி வடிவாக எழுதப்படும் ஓர் வடமொழி எழுத்து; அனுச்சுவாரம்- உயிரின் பின்வரும் மகாரவிகாரமாகிய புள்ளி). மந்திரங்கள் அனைத்தும் பிரணவத்தை முன்னாகவும் நம என்னும் முடிவை இறுதியாகவுங் கொண்டு விளங்கும்.

### 3. கிரியைகள் விதிப்படி மந்திர பாவனைகளுடன் செய்யப்படின் சித்தியாதல்

பஞ்சப்பிரம மந்திரம் சிவபெருமானுக்கே உரியது; சிவபெருமானின் வேறான தெய்வங்களுக்குக் கூடாது. அங்கமந்திரம் ஆறும் எல்லாத்தெய்வங்களுக்குங் கூடும். எம்மால் சிவபெருமானுக்காகுங் கிரியைகள் எவ்வாறு கூறப்பட்டனவோ அவ்வாறே அக்கிரியைகள் எல்லாத்தெய்வங்களுக்குமாகும்.

மந்திரங்களுக்கு அதிபதியாய் விளங்குந் தெய்வங்களுக்கு ஆவாகனஞ் செய்தல், தாபனஞ் செய்தல், அருக்கியங்கள் கொடுத்தல், ஆசமனஞ் செய்தல், நியாசஞ் செய்தல், தாரணை செய்தல், தியானஞ் செய்தல், கிரியைசெய்தல் பலவிதமான அருச்சனைசெய்தல், பலியிடுதல், அலங்காரஞ் செய்தல், செபஞ் செய்தல், ஓமஞ் செய்தலாகிய இவைகள் சிவபெருமானுக்குக் கூறியவாறே ஆகும். மந்திரம், கிரியை, பாவனை என்னும் இம்மூன்றையுங் குற்றமறச் செய்யின் அச்செயல் முற்றுப்பெறும், போகம், மோட்சம் என்னும் இரண்டினுள் விரும்பியபேறு உண்டாகும்.

### 4. மந்திரத்தை உச்சரித்து வழிபடும் முறையும் பயனும்

மந்திரஞ் சொல்லப்படாத கிரியைகளை இதய மந்திரத்தாற் செய்க. எந்த மந்திரம் எந்தக் கிரியைக்கு உரியதென விதிக்கப்பட்டதோ அந்தவிதியின் வழுவாதவண்ணம் அந்த மந்திரத்தால் அக்கிரியைச் செய்க. அன்புடன் மந்திரத்தைச் செபிப்பவன் எந்தத் தெய்வத்தை வழிபடுகின்றானோ அந்த தெய்வத்தின் வடிவமாகவே தன்னைப்பாவித்து வழிபடுதல் வேண்டும். மந்திரசொரூபமாகிய எந்தத் தெய்வத்திற்கு எந்த மந்திரம் உண்டோ அந்த மந்திரம் வாசகமும் அந்தத் தெய்வம் வாச்சியமுமாகும்.



மந்திரங்களை உச்சரிக்கும் முறை வாசகம், உபாஞ்சு, மானசம் என மூன்றுவகைப்படும். தூலமாய் உச்சரிக்கப்படும் வாசகம் அழகுபொருந்திய சொற்களின் வண்ணமாகின்ற வாக்குச் சித்தியைத் தரும்; சூக்குமம் எனப்படும் உபாஞ்சு விளங்குகின்ற யோகசித்தியைத் தரும்; பரம் எனப்படும் மானசம், மந்திரம் உச்சரிக்கின்ற தான் இனிமேற் பிறவியைப் பொருந்தாத வண்ணம் மாட்சிமைப்பட்ட பரமுத்தியைப் பொருந்தும் படி செய்யும். பஞ்சப் பிரம மந்திரமானது குறிலையுடைய பீசாக்கரத்தோடு சேர்ந்திருக்கும்; எல்லாப் பீசாக்கரங்களின் இறுதியிலும் விந்து கூடியிருக்கும்.

வாசகமாவது, தனக்கும் பிறர்க்குங் கேட்கும்படி மந்திரத்தை செபித்தலாம்; இதற்குப் பாடியம் என்றும் பெயர். உபாஞ்சு, தன் செவிக்கு மாத்திரம் கேட்கும்படி நாநுனி உதட்டைத் தீண்ட மெள்ளச் செபித்தலாம். மானசமாவது நாநுனி உதட்டைத் தீண்டாமல் ஒருமை பொருந்தி மனசினாலே செபித்தலாம். இதனை அறிவாற் கணித்தல் என்பர்.

வாசகம் நூறுமடங்கு பலமும், உபாஞ்சு பதினாயிர மடங்கு பலமும், மானசம் கோடிமடங்கு பலமும் தரும்.

### 5. மந்திரமே பலவாதலும் உயிர் மந்திரான்மாவாய் நிற்றலும்.

ஒரு தீபத்திலிருந்து பல தீபங் கொளுத்தியவாறு போல மேலான சிவமந்திரத்திலிருந்து அநேக மந்திரங்கள் உண்டாகும். அவ்வாறு மந்திரங்கள் பலவாயினும் அவையெல்லாம் சிவமந்திரத்தின் பேதங்களேயாம். ஏரி, ஓடை, முதலிய வேறுபாட்டால் ஏரிநீர், ஓடைநீர் முதலியனவாகப் பலவேறு வகைப்படினும் அவையெல்லாம் நீர் என்னும் ஒன்றின் பேதங்களே. அதுபோல மந்திரங்கள் பலவாயினும் அவையாவும் ஒரு மந்திரத்தின் பேதங்களே. மந்திரங்கள் அதிட்டிக்குந் தெய்வங்களும்

பலவித பேதங்களாகப் பொருந்தி நிற்பினும் அத்தெய்வங்கள் அனைத்தும் சிவமாகிய ஒரு பொருளேயாம். சொல்லப்படுகின்ற தெய்வ ஆராதனைகள் செய்பவன் அந்தத் தெய்வத்திற்கு ஆகும் நியாசங்கள் தனக்குஞ் செய்து அந்தத் தெய்வத்தின் வடிவாகத் தானிருந்து பூசை செய்யக் கடவன்.

நியாசமாவது, குறித்த தானங்களில் தெய்வத்தைப் பாவித்துத் தொழுதல். எந்தத் தெய்வம் எவ்வாறு இருக்குமெனவும், அத்தெய்வத்திற்கு எவ்வாறு உபசாரங்கள் செய்ய வேண்டுமெனவும், நூல்களிற் கூறப்பட்டதோ அம்முறைப்படி செய்யின் மேலான பலன்கள் கைகூடும். படிகத்தின் ஒளியானது சாரப்பட்ட பொருள்களின் செம்மை முதலிய நிறங்களின் பேதத்தால் பலவாக விளங்குமாறுபோல, நாதமயமான ஒருமந்திரமே கேட்கின்றவர்களுடைய அபிப்பிராய பேதங்களாற் பல மந்திரங்களாகும்.

எல்லா மந்திரங்களையும் பொருந்தி நிற்குங் காலத்து உயிர் மந்திரான்மா என விளங்கும்.



# பரமான்மப் பிரகரணம்.

## 1. சீவன் பரமான்மாவாக நிற்கும் முறைமை.

இனி, சீவான்மா பரமான்மாவாய் நிற்கும் முறைமையைக் கூறுகின்றோம். பரமான்மாவைச் சார்ந்து நிற்குங் காலத்து, சார்ந்ததன் வண்ணமாந்தன்மையுடைய உயிரினிடத்துப் பரமான்மாவின் குணங்கள் முற்றும் விளங்கித் தோன்றப் பரமான்மாவாய் நிற்கும். அதன் குணங்கள் விளங்கித் தோன்றும் போது மேலானவற்றுள் மேலானதாய், கடவுளாய், சொல்லப்பட்ட மந்திரங்கட்கு அப்பாற்பட்டவனாய், எவற்றையும் அறிபவனாய் தோற்றுகின்ற எல்லா வடிவங்களின் சாரமாய், எல்லா ஆன்மாக்களுந் தானாய், எங்கும் வியாபகனாய், குணமும் வடிவமும் நிறமும் இல்லாதவனாய், விகற்பமில்லாதவனாய், மலமில்லாதவனாய், துன்பமில்லாதவனாய், தனக்கோர் ஆதாரமில்லாதவனாய் ஐந்து பூதங்களினும் வியாபித்து நிற்பவனாய், சலிப்பில்லாதவனாய், இந்திரியங்கட்கு அப்பாற்பட்டவனாய், செயலில்லாதவனாய், எங்கும் நோக்கமுடையவனுமாய், தனக்கோர் உவமையில்லாதவனுமாய் விளங்குவான்.

உயிர்கள் புண்ணிய பாவங்களை ஈட்டுதற்கும், அவற்றை ஒழித்து வீடுபெறுவதற்கும் வழியாயுள்ளன அத்துவாக்கள் எனப்படும். அவையாவன. மந்திரம், பதம், வன்னம், தத்துவம், புவனம், கலை, என்னும் ஆறுமாம். வன்னம் என்பது எழுத்து. எழுத்தும், எழுத்தால் ஆகிய பதமும், பதத்தால் ஆகிய மந்திரமும் ஆகிய மூன்றும் சொல்வடிவின. ஆதலினால் அம்மூன்றுஞ் சொற்பிரஞ்சம் எனப்படும். தத்துவம், புவனம், கலை ஆகிய மூன்றும் பொருள் வடிவின. ஆதலினால் அம்மூன்றும் பொருட்பிரபஞ்சம் எனப்படும்.

கலையானது சிற்சத்தியின் தொழிற்பாட்டுப் பேதம் பற்றி ஐவகைப்படும். அவையாவன நிவிர்த்திகலை, பிரதிட்டாகலை, வித்தியாகலை, சாந்திகலை, சாந்தியதீதகலை என்பனவாம்.

இக்கலைகள் ஐந்தினையும் முறையே பிரமன், விட்டுனு, உருத்திரர், மகேசுரர், சதாசிவர் என்னும் ஐவரை ஆதாரமாகக் கொண்டு நின்று படைப்பாதி ஐந்தொழிலையும் புரிவர்.

பிருதிவி தத்துவம் முதல் சிவதத்துவம் ஈறாகச் சொல்லப்படும் தத்துவம் முதலிய ஆறு அத்துவாக்களின் வடிவமனைத்தும் உருவம் எனப்படும். உபாசகன் எனச் சொல்லப்படுபவன் தத்துவங்களிற் கட்டுப்பட்டிருக்கும் தெய்வ உருவங்களைப் பாவித்து உபாசனை செய்யின் உபாசிக்கின்ற தானும் அவ்வுருவமேயாவான். அவற்றைப்பாவியாது அத்தத்துவங்களைக் கடந்து நிற்கும் ஞானசொரூபமான சிவசொரூபத்தைப் பாவித்து உபாசனை செய்யின் தானும் அச்சிவ சொரூபமாவான்.

## 2. ஓர் ஆன்மாவே ஆறு பேதமாதல்

ஓர் ஆன்மாவே பூதான்மா, அந்தரான்மா, தத்துவான்மா, சீவான்மா, மந்திரான்மா, பரமான்மா, என ஆறுபேதமாய் விளங்கும். ஆதலினால் ஆன்மா ஆறு விதப்படுந் தொகையைத் தொகுத்துச் சொல்லுவாம்.

பூத பரிணாமமாகிய உடம்பொடு கூடிநிற்றலாற் பூதான்மா எனப்படுவன். சொல்லப்படுகின்ற வாக்குக்களோடு கூடிநிற்றலால் அந்தரான்மா எனப்படுவன்; மேன்மைதங்கிய தத்துவங்களோடு கூடிநிற்றலாலே தத்துவான்மா எனப்படுவன்; கூறப்படுகின்ற பிரகிருதியின் குணமாகிய சாத்துவித இராசத தாமதங்களைப் பொருந்திச் சுகதுக்கபோகங்களைக் குற்றமற அநுபவித்தலாற் சீவான்மா எனப்படுவன். தெய்வத்தின் பிரசாரத்தை செய்கின்ற மந்திரங்களோடு கூடிநிற்றலால் மந்திரான்மா எனப்படுவன். இவையனைத்தையும் அறவே விட்டவிடத்து அவன் பரமான்மா எனப்படுவன். ஓர் ஆன்மாவே இவ்வாறு ஆறு பேதங்களாக விளங்கும் ஆன்மாவுக்கு உரிமையான நாமங்கள் பூதான்மா முதலிய இவையேயன்றி இன்னும் அநேகம் உண்டு.



## 3. *சீவான்மா சிவஞானத்தால் பரமான்மாவாக விளங்குதல்*

சிவனும் சீவனும் வேறுபட்ட தன்மையுள்ள இரு வேறு பொருள்கள். அவை சித்தாகிய ஒத்தசாதியினவாதல்பற்றி அவற்றை பரமான்மா சீவாத்மா எனவும் பரப்பிரமம், சீவப்பிரமம் எனவும் அழைப்பர். ஆத்மா, பிரமம் என்பன பரியாய நாமங்கள். அவை அடையின்றி வழங்கும் போது சிவனைக் குறிக்கும். சீவாத்மா சீவப்பிரமம் என அடையடுத்தவழி சீவனைக் குறிக்கும். அடையடுத்த சீவாத்மா, சீவப்பிரம்மம் என்பன சிவனைக் குறிக்குமெனல் பொருந்தாது. அவ்வாறு கூறுங்கூற்று பதியைப்போலவே பசு, பாசங்களும் அநாதி என முன்னர்க் கூறியதனோடு முரணும்.

சீவன் பலவுலகங்களிலும் பலயோனிகளிலும் பல தேகங்களிலும் பொருந்திச் செய்கின்ற இருவினைகளால் அஞ்ஞானத்தில் மூழ்கும்; வினைப்பயன்களாகப் பொருந்து சுகதுக்கங்களுடையதாய் ஞானம் வருமளவும் பிறப்பு இறப்புகளுட் பட்டுத்திரியும்; சிவஞானம் உதித்த விடத்துச் சகல உபாதிகளும் நீங்கப்பெறும். சாந்தமாயும் மேலாயும் பிரகாசிக்கின்ற வீடு கைகூடும். அப்பொழுது சீவப்பிரமமே உபாதிகள் அனைத்தும் நீங்கப் பெற்றமையால் பரப்பிரமாய் விளங்கும்.

சீவான்மாவுக்குச் சுசாதியாகிய பரமான்வாவோடு பிரிப்பின்றி கலந்து நிற்றல் இயற்கை; ஏனைய உபாதிகளோடு கூடிநிற்றல் செயற்கை. உபாதியாதலின் செயற்கை நீங்கும். சுசாதியாதலின் இயற்கை நீங்காது. நீங்காதாயினும் செயற்கையோடு கூடிநிற்குங் காலத்து இயற்கை வெளிப்பட்டுத் தோன்றுதலில்லை. செயற்கை அறவே நீங்கியவிடத்து இயற்கை வெளிப்பட்டு விளங்கித் தோன்றும். தோன்றுங்கால், முன்னுள்ள செயற்கையை நோக்க இயற்கை புதிதாக ஆனதுபோல விளங்கும்; சீவப்பிரமமே பரப்பிரமமாய் விளங்கும்.

## 4. ஓர் ஆன்மாவுக்கு பலநாமங்கள் வந்தமைக்கான காரணங்கள்

பரமான்மா எனப்படும் பரமசிவன் மலமில்லாதவன்; மயக்க அறிவற்றவன்; பிறப்பு, இறப்பு அற்றவன், அருவம் அருவுருவம் உருவம் என்னும் மூன்று தடத்தத் திருமேனிகளைப் பொருந்தி இலயம், போகம், அதிகாரம் என்னும் அவத்தைகளை உறுபவன்; அவத்தைகளை அடைந்தாலும் உபாதிகளோடு கூடி விகாரியாகான்; விருப்பு, வெறுப்புற்றுப் பாசபந்தங்களிற் கட்டுப்படான்; பிறப்பிறப்பை அடையான்.

சீவான்மாவே மலமும் பிறப்பு இறப்பும் உடையது. மயக்க அறிவுடையது; அம்மயக்கங் காரணமாக உண்டாகும் நிலையின் பேதங்களைக் கருதிப் பல நாமங்கள் மயக்கமில்லாதவர்களாற் கற்பிக்கப்பட்டன. அக் கற்பனைப் பெயரைப் பொருந்தியிருக்கும் ஆன்மா அந்த நிலையை உணராது. மயக்க அறிவுடைய ஓர் ஆன்மா சீவான்மாவேயன்றி பரமான்மாவன்று.

ஒருவனே இராவணன் முதலிய உபாதி பேதங்களைப் பொருந்துதலால் மிகவும் வேறுவேறான நாமத்தையுடையவனாவன். அதுபோலவே விளங்குகின்ற ஓர் ஆன்மாவுக்கே சித்தத்தின் பேதங்களால் அநேக நாமங்கள் வழங்கலாயிற்று. நாமம் இல்லாத ஆன்மாவிற்கு உபாதிபேதங்களின் கற்பனையால் பூதான்மா முதலாகப் பல நாமங்கள் கற்பிக்கப்பட்டன.

ஓர் ஆன்மாவே தூலதேகத்துடன் கூடி அதுவாய் நிற்குங்கால் பூதான்மா எனப்படும். நால்வகை வாக்குக்களோடு கூடி அதுவாய்நிற்குங்கால் அந்தரான்மா எனப்படும். அந்தக் கரணங்கள் முதலிய தத்துவத்துடன் கூடி அதுவாய் நிற்குங்கால் தத்துவான்மா எனப்படும். புருட தத்துவத்துடன் கூடி அதுவாய் நிற்குங்கால் சீவான்மா எனப்படும். மந்திரங்களோடு கூடி அதுவாய் நிற்குங்கால் மந்திரான்மா எனப்படும். பரமான்மா என்னுஞ் சிவனோடு கலந்து அதுவாய் நிற்குங்கால் பரமான்மா எனப்படும். உபாதிபேதங்களால் இன்னும் அநேகபெயர்கள் உண்டு. அப்பெயர்கள் அனைத்துங் கற்பனைகளே.



## 5. அத்துவித ஞானம் வரும் முறைமை

சிவம், பூதம் முதலிய அனைத்துப் பொருள்களுந் தானாய் விளங்கும். இவ்வாறு எல்லாப் பொருள்களுமாய் விளங்கும் செல்வம் சிவமேயாகும். அந்தச்செல்வமாகிய சிவபெருமானிடத்து விட்டு நீங்காத சிவோகம் பாவனையை எவனொருவன் செய்கின்றானோ அவன் அந்தச் சிவனால் விழுங்கப்பட்டவ னாவான். சிவசொரூபம் கண்ணாலே காணத் தக்கதாக விளங்குதற்குரியவனாக இருந்தும் சிவன் வேறு சீவன்வேறு எனப் பேதமாகக் காண்கின்றவன் எவனோ அவன் பிறந்து இறந்து உழலுவான். ஆதலால் முத்தன் 'சிவனே நான் நானே அச்சிவம்' என்னும் பிரிப்பின்றி நிற்றலாகிய அத்துவித பாவனையை அனுட்டிப்பான்.

பதமுத்தி, பரமுத்தி என முத்தி இருவகைப்படும். அவற்றுள், பதமுத்தியில் அருள்விளங்கித் தோன்றுமெனினும் பரமுத்தியிலே பூரணமாய் விளங்கித் தோன்றும்; அவ்வாறு அருள் நிறைந்திருக்கின்ற பரமுத்திக்கு காரணமாக விளங்குவது அத்துவித பாவனையாகிய சிவோகம் பாவனையாகும். அது சிவனும் சீவனும். அநாதியே பிரிப்பின்றிக் கலந்து நிற்றலையுணர்ந்து அத்துவிதமாகப் பாவிக்கும் பாவனையாகும். அத்துவித பாவனையாகிய சிவஞானம் சரியை, கிரியை, யோகங்களை அநுட்டித்து அதனால், சித்தசுத்தியும், இருவினையொப்பும், மலபரிபாகமும் வரப்பெற்றவருக்கு விளங்கித் தோன்றும்.

சரியை, கிரியை, யோகம் என்னும் மூன்றினுள், சிவதீட்சை பெற்றவர் சரியைக்குரியவராவார். விசேடதீட்சை பெற்றவர் கிரியை, யோகம் என்னும் இரண்டிற்கும் உரியவராவர். இச்சரியையாதிகளில் ஒழுகுதலினாலேயே மனம் சுத்தி எய்தும். அதனால் நித்த அநித்த பொருள்களின் உணர்வு விளங்கித் தோன்றும். தோன்றவே அநித்தப் பொருள்களிடத்து வெறுப்பும், நித்தப்பொருள்களிடத்து

விருப்பும் உண்டாகும். உண்டாகவே நித்தப் பொருளைத் தெரிவித்தற்குரிய ஞானகுருவைத் தேடவரும். அவர் வரவே வெளிப்பட்டுத்தோன்றி சிவஞானத்தை விளக்குதற்குரிய சிவாகமங்கள், அவற்றின் கருத்தை விரித்துரைக்கும் சிவஞான சித்தியார் முதலிய சிவசாஸ்திரங்களை உபதேசிப்பார். அவர் உபதேசித்த பொருளைச் சிந்தித்துத் தெளிதலினால் இருவினைஒப்பும் மலபரிபாகமும் வரும். அவ்விரண்டும் வரவே சக்திநிபாதம் உண்டாம். இம் மூன்றும் ஒருங்கே உடையார்க்கு அத்துவித ஞானம் விளங்கித் தோன்றும்.

இருவினையொப்பாவது, நல்வினைப்பயனாகிய இன்பத்தினும் தீவினைப்பயனாகிய துன்பத்தினும் விருப்பும் வெறுப்பும் உடையவனாகாது இப் பயன்கள், நம்முடைய முன்வினைக்கேற்ப இறைவன் திருவருள் கூட்டுவித்தலால் திருவருட்செயலே எனக் காணுதலாகும்.

### 6. *மலபரிபாகமாவது மலத்தினது சத்தி தேய்தல்*

அதாவது யான் கருத்தாவென்றும், பொருள்கள் எனது என்றும் உணர்கின்ற மயக்க உணர்வு குன்ற யான் சிவனடிமையென்றும் எனது எனப்படும் பொருள்கள் சிவனுடைமை என்றுங் காண்டல். சத்திநிபாதமாவது, திருவருட்சத்தி பதிதலாம். பதிதல் என்பது விளங்கித் தோன்றுதல். அது, மந்ததரம், மந்தம், தீவிரம், தீவிரதரம் என நான்கு வகைப்பட்டு ஒன்றுக்கொன்று மேலாகும்.

இருளின் நீக்கமும் ஒளியின் விளக்கமும் போல இரு வினையொப்பும், மலபரிபாகமும் சத்திநிபாதமும் உடநிகழ்ச்சியாய் நிகழ்வனவாகும். சரியையாதி ஒழுக்கமில்லாதவர்கள் சிவசாத்திரங்களைக் கேட்டல் கூடாது. கேட்பினும் அவர்களுக்கு இருவினையொப்பு மலபரிபாகம் வருதல் இல்லை, அதனால் அவர்கள் அனுபவ அறிவைப் பெறுதலில்லை.



### 7. *அத்துவித பாவனையாலே தன்னையறிதல்*

ஆன்மாவின் சொரூபம் சோதிமயம்; அநாதியான மலத்தடையால் அந்தச் சோதிமயம் விளங்கித் தோன்றுவதில்லை. சிவஞானத்தால் எல்லாமாகவும் மலத்தடையில்லாதவனாகவும் ஆகும் போது சோதிமயம் விளங்கித் தோன்றுவதால் அது ஆதி எனப்படும்.

இறைவன் இவ்வாறு தடைப்பட்டு இடையே விளங்கித் தோன்றாது என்றும் சோதிமயமாக விளங்குவன், அவ்வாறு விளங்கும் இறைவனை மலத்தடையுற்று நிற்கும் ஆன்மா விட்டுப் பிரிதலில்லை. பிரிப்பின்றி நின்றாலும் தன் சொரூபம் விளங்காமையின் தான் இறைவனோடு பிரிப்பின்றி நிற்பதை உணர்வதில்லை. தன் சொரூபம் விளங்கித் தோன்றும் போது தன்னைச் சோதிமயன் என்றும், தான் இறைவனோடு என்றும் பிரிப்பின்றி நிற்பவன் என்றும் உணரும். அங்ஙனம் உணர்தலே தன்னைத்தான் அறிதலாகும். சிவஞானத்தால் தன்னை அறிந்தவன் சீவன் முத்தனாவான்.

### 8. *சீவன்முத்தர் தன்மை* —

என்றும் ஒரு தன்மையாயுள்ளது. நித்தப்பொருள்; என்றும் ஒரு தன்மையில்லாது தோன்றி நின்று ஒடுங்குவது அநித்தப்பொருள், மண்போலச் சடமாயும் ஒன்றாயுமுள்ளது நித்தப்பொருள்; குடம்முதலியன போலச் சடமாயும் பலமாயுமுள்ளன தோன்றி நின்று ஒடுங்கும் அநித்தப் பொருளாகும். காரணப் பிரபஞ்சமாகிய மாயை ஒன்றாயுஞ் சடமாயுமிருத்தலின் நித்தியமானது. காரியப் பிரபஞ்சமாகிய உலகப் பொருள்கள் பலவாயும் சடமாயுங் காணப்படுதலின் தோன்றி நின்று ஒடுங்குவனவாம். சீவன் முத்தன் தோற்றப்பட்ட பிரபஞ்சமனைத்தும் வேறுபாடுடையவாதலின் நிலையற்று அழியுந் தன்மையுடையன என்றுணர்வான். உள்ளதெனும் உணர்வால் உரைப்படும் ஆறு அத்துவாக்களையும் கடந்த விடத்து அச் சீவன்முத்தனுக்குப்

பரம் பொருள் விளங்கித் தோன்றும். தோன்றினும் இதுகாறும் கண்டறிந்த பொருள்கள் ஒன்றனோடும் உவமித்தறிதல் கூடாமையின் சூனியமோ என ஐயுறுவான். சூனியமாயின் இன்பந்தராது; இன்பந்தருதலால் சூனியமன்றெனத் துனிவான். துணிந்து அதுவே சிவ பரம்பொருளாகிய சோதியெனத் தெளிந்து அதுவாய் நின்று செயற்கையாகிய உடல் சம்பந்தமான எல்லா வாதனைகளின் பற்றையும் விட்டு நீங்குவான். பற்றற்றவனாகிய சீவன்முத்தன் தோற்றப்பட்ட உலகத்திற்கு நிமித்த காரணமாக விளங்கும் முதல்வன் நானே; அழியாத பொருளும் நானே; மேலான பிரமம் நானே; மலக்குற்றமின்றி என்றும் நிலைபேறுடையதாய் விளங்கும் பரமசிவனும் நானே என்றிவ்வாறு சிவனோடு பிரிப்பின்றி நிற்குஞ் சிவயோகஞ் செய்வான். சிவஞானம் வந்தவிடத்துச் சரியை, கிரியை, யோகம் என்னும் மூன்றும் உறங்கினவன் கைப்பொருள் நழுவுமாறுபோல அவனைவிட்டு நழுவிவிடும். சரியையாதிகளை இழந்து சிவஞானத்தில் நிலைபெறுங்கால் சிவமும் நானும் ஒன்றோ, வேறோ என்ற ஐயப்பாடு உண்டாகும். சிவமும் தானும் பொருட்டன்மையால் வேறு என்றும், கலப்பால் ஒன்று என்றும் அறிந்து ஐயத்தினின்றும் நீங்கப்பெறுவான், நாடுதற்கரிய சீவான்மா பரமான்மாவோடு வேறறக் கலந்து நிற்றலையுணர்வான். பரமான்மாவோடு கலந்து, அவ்வாறு கலந்து நிற்றலையுணரும் அறிவு பிறந்து, அந் நிலையினும் பார்க்க மேலாக அதீதப்பட்டுச் சிவமாகவே விளங்கப் பழகுதலையே தனது கடமையாகக் கொள்வான்.

சிவபரம்பொருள், மாயாகாரியமான குணமில்லாதது; மலமில்லாதது; விகற்பமில்லாதது; நித்தியமானது; நிரஞ்சனமானது; நிராதாரமானது; உலகப்பொருள் ஒன்றோடும் உவமிக்க முடியாத அற்புதமானது; முதன்மையானது; பிரமாணங்களால் அளக்கப்படாதது; இது முதற் பொருளோ அல்லவோ எனச் சந்தேகிக்கப்படாதது; பாவனைக்கு அகப்படாதது; சூக்குமமானது; உயிருக்கு அதீதமானது; சிவஞானக் கண்ணால் காணத்தகும் விசேடமாகிய சுத்த சைதன்னியமானது; என்றும் நிலைபேறுடையது; எல்லாப் பொருள்களாயும் அப் பொருள்களின்



உள்ளீடாயும் உள்ளது; ஞானமயமானது; எங்கும் நிறைந்த வியாபகமாக விளங்குவது. இத்தகைய சிவன் தன் அறிவினிடத்துப் பிரிப்பின்றி விளங்குவதைச் சீவன்முத்தன் உணர்வான்.

அத்துவாக்கள் ஆறனுள் பதம், மந்திரம், வன்னம் மூன்றும் அமூர்த்தமாகிய சொற்பிரபஞ்சம். தத்துவம், புவனம், கலை என்னும் மூன்றும் மூர்த்தமாகிய பொருட் பிரபஞ்சம். இப் பொருட்பிரபஞ்சத்துள்ளும் கலையும், சூக்கும சரீர தத்துவங்களும் அமூர்த்தம்; புவனமும், தூலசரீரதத்துவங்களும் மூர்த்தம். ஆகவே மூர்த்தமும் தூலம், சூக்குமம் என இரு வகைப்படும்.

சிவனைத் தன்னிடத்து விளங்க உணர்ந்ததனால் (மந்திரங்கள், பதங்கள், அக்கரங்கள், புவனங்கள், தத்துவங்கள், இவற்றைப் பொருத்தி நிற்கும் நிவர்த்தி முதலிய பஞ்சகலைகள் முதலாக) உருவமாயும் அருவமாயும் காணப்படுகின்ற காரிய ரூபமாகிய அண்டங்கள் அனைத்தும் தன்னிடத்திருப்பதாகவே காண்பான். காணுமவன், எப்பொழுதும் எல்லாப் பொருள்களையும் அறியும் முற்றுணர்வுடைவனாகி, எங்கும் பரிபூரணமாயும் நின்மலமாயுமுள்ள அபரமுத்தனுமாவான். சுபாநுபவமாயும் ஒப்பற்ற உண்மையாயுமுள்ள நிரதிசய இன்ப மயனாகிச் சிவமே தானாக விளங்கித் தோன்றும், தன்மையையுடையவனாயிருப்பன்.

## ૭. அறிவு சொரூபமே முடிந்த நிலை.

சிவாகமங்களின் முடிவான பொருள்களை ஒரு வசமாகச் சொன்னேம். சிவன் வேறு யான் வேறு என்னும் வேற்றுமையின்றிச் சிவனே நான் என ஒற்றுமையுறக் காண்பதுவே உண்மையான சிவாநுபவவாகும். மீண்டும் மீண்டும் நீ பல வசனங்களாகப் பலவாறு கேட்டாலும் நாம் பின்னரும் இந்த உபதேசத்தையே கூறுவோம். கூறப்படும் வசனங்களின் கூட்டமானது விகற்பமானது. விகற்பத்துக்கு ஏதுவான பலபொருள்களையுந் தோற்றுவிக்கும்.

ஆதலினால் பலபட எண்ணித் தடுமாறாது வேற்றுமையின்றிச் சிவனே தானாகி, வாக்கு விகற்பங்களை ஒழித்து, ஞான நிலையென்றும் மோனநிலை என்றுஞ் சங்கற்பிக்கும். சங்கற்பங்கள் இல்லாத கேவலநிலையைப் பொருந்தி அறியாமையாய்க் கிடவாது, அறிவு சொரூபமாய்ச் - சிவமாய் நின்ற நிலையே முடிந்த நிலையாகும்.

## 10. சுத்தாத்துவித முத்தி

உண்மையான உபதேசமொழியைக் கூறினோம்; இன்னும் கூறுகின்றோம். சிவமே தானாக விளங்குகின்ற பிரிக்க முடியாத சம்பந்தமே சுத்தாத்துவிதமாகும். இந்த சுத்தாத்துவித நிலையை உணர்தலே மீட்டும் பிறவிக்கு வாராத முத்தியாகும். சுத்தாத்துவிதமென்னுஞ் சொல் ஏனைய அடையடுத்த கேவலாத்துவிதம், விசிட்டாத்துவிதம் போலாகாது அடையடுக்காது நின்றே இருபொருள்களின் கலப்பையுணர்த்தும்.

ஆன்மாவின் பொதுவியல்பு அத்துவிதம். பொதுத் தன்மையாகிய துவிதநிலை பிறப்பைத்தரும். ஆதலாற் சிறப்புத் தன்மையாகிய சிவனோடு பிரிப்பின்றி நிற்றலையறிந்து தன்னைச் சிவமாக உணர்தலே முத்தியாகும். இயல்பாகவே பிரகாசமுள்ளதாயும், எங்கும் நிறைவாயும், தத்துவங்களுக்கு அதீதமாயும் தன்னை அறியும் இந்தச் சுத்தாத்துவித முத்தியே சகல ஆகமங்களின் முடிவுமாகும். சருவஞானோத்தரம் என்னும் ஆகமம் பூரணமாய் முற்றுப்பெற்றது.

சருவ ஞானோத்தர ஆகமம்
ஞானபாத முத்திரத்ந வசனம்

முற்றிற்று

மெய்கண்டதேவர் திருவடி வாழ்க
சிவஞான சுவாமிகள் திருவடி வாழ்க.
ஓம் சிவ ஓம்

